# "செந்தமிழ்ச் செல்வி"

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)



---

# உள்ளுறை

பக்கம்

# செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

சிலம்பு-௫௯     தி. வ. ஆண்டு ௨௦௧௬, மாசி     பரல்-எ

மார்ச்சு 1985


—————

## மீண்டும் எரியும் இலங்கை

தமிழ்நாட்டைத் தவிர, தமிழர்கள் தம் சொந்த நாடாகக் கொண்ட மற்றொரு நாடு உளதெனின் அஃது ஈழ நாடே யாகும். இந் நாட்டின் வடபகுதியில் தமிழர்கள் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக வாழ்கின்றனர். இருப்பினும் கடந்த அரை நூற்ருண்டாகத் தமிழர்களை இலங்கையிலிருந்து வெளியேற்ற இலங்கையரசு பல்வேறு முயற்சிகளை மேற்கொண்டு வருகின்றது. அதிலும் அண்மைக்காலமாகத் தமிழர்களுக்கு அவ்வரசு இழைத்து வரும் கொடுமைகள் கொஞ்ச நஞ்சமல்ல.

கடந்த சில நாட்களாகக் காலை வானொலியில் மாநிலச் செய்தியில் அன்ருடம் நூற்றுக்கணக்கான இலங்கைத் தமிழர்கள் திக்கற்றவர்களாய்த் தமிழகம் நோக்கி வருகின்றனர் என்ற செய்தியைக் கேட்ட வண்ணமிருக்கின்ரேம். அவ்வகையில் இதுகாறும் ஏறத்தாழ 15 ஆயிரம் பேர் இங்கு வந்துள்ளனர். இதுபற்றிச் சிந்திக்க வேண்டிய நிலையில் இன்னும் நாம் இருக்கிரேம்.

முதலில் அந் நாட்டின் தலைநகரமான கொழும்பில் இருந்த தமிழ்நாட்டுத் தமிழர்களை வெளியேற்றினர். பிழைப்பிற்காகச் சென்றவர்களும் வேறுவழியின்றித் தாயகம் திரும்பினர். அடுத்து மலைப் பகுதிகளிலும், தோட்டப் பகுதிகளிலும் தொழிலாளர்களாகப் பணியாற்றியவர்களுள் தங்களுக்குத் தேவையானவர்களை மட்டும் வைத்துக்கொண்டு எஞ்சியோரைத் தமிழ்நாட்டிற்கு அனுப்பிவிட்டனர். அத்துடன் நின்றனரா எனில், இல்லை.

கடந்த ஆண்டு கொழும்பில் இருந்த இந்திய, ஈழத் தமிழர்களைப் பல கொடுமைகட்கு உட்படுத்தி அவர்தம் உயிருக்கும் உடை

மைக்கும் பாதுகாப்பற்ற நிலையினை உண்டுபண்ணினர். அதிலும் அவர்கள் ஓரளவு வெற்றி கண்டபின் தமிழ் இனத்தையே அடியோடு ஒழித்திடத் திட்டமிட்டனர். யாழ்ப்பாணத்திலும் பிற தமிழ்ப் பகுதிகளிலும் வாழும் தமிழர்களைக் கொடுமைப்படுத்தத் தொடங்கினர். யாழ்த்தமிழர்களை ஒழித்துவிடுவதே இலங்கையரசின் திட்டம். அதைப் படிப்படியாகச் செய்து வருகிறது.

இலங்கை அரசின் உள்ளக்கிடக்கையை உணர்ந்த நாள்முதல், யாழ்நாட்டு இளமறவர்கள் விடுதலைப் போரில் ஈடுபட விடுதலைப் புலிகளாக மாறித் தொடர்ந்து அரசை எதிர்த்துப் போராடி வருகின்றனர். அரசு தன்னுடைய படைபலத்தால் அவ்வப்போது அவ் விடுதலைப்புலிகளை அழித்துவருகின்றது. எனினும் விடுதலைப் புலிகள் அஞ்சிப் பின் வாங்குவதாகவோ, தம்முடைய எதிர்ப்பைக் கைவிட்டதாகவோ தெரியவில்லை.

இதற்கிடையில் குற்றமேதும் அறியாத ஈழமக்கள் சிங்களப் படையினரால் கொடுமைப்படுத்தப்படுகின்றனர். விடுதலைப் புலியினரை அடக்கும் திறனில்லாத சிங்களப்படை அவ்வப்போது அவர்களைச் சாக்கிட்டு ஏதுமறியாப் பொதுமக்களைச் சுட்டு வீழ்த்தி வருகிறது. வீடுகளுக்குள் புகுந்து இளைஞர்களை வலுக்கட்டாயமாக அழைத்துச் சென்று சோதனை என்ற பெயரில் கொடுமைப்படுத்துகின்றனர். இளம் பெண்களைச் சொல்லொண்ணாத் துயருக்காளாக்குகின்றனர். சுருங்கச் சொல்ல வேண்டுமானால் பெரும்பாலோரை 'அகதி'களாக வெளியேற்றவும், எதிர்ப்போரைப் படைபலம் கொண்டு அழிக்கவும் தமிழ் இனத்தையே வேரோடு அழித்துவிடவும் துடிக்கின்றனர் என்றே சொல்ல வேண்டும்.

இலங்கை அரசின் இத்தகைய கொடுமைகளுக்கு அஞ்சிய பொதுமக்கள் குழந்தை, குட்டிகளுடன் படகுகளிலேறித் தமிழ் நாட்டிற்குக் கடந்த ஒரு மாதகாலமாக இரவோடு இரவாக வந்த வண்ணமிருக்கின்றனர். இவர்களையும் சிங்கள வெறியர்கள் விட்டு வைக்கவில்லை. இவர்கள் தப்பிச் செல்லும் படகுகளைத் தாக்கிக் கவிழ்த்துவிடுகின்றனர். மக்கள் நடுக்கடலில் விழுந்து கரையேறத் தெரியாது மடிந்து போகின்றனர்.

இந் நிலையில் நம் இந்திய அரசும் தமிழக அரசும் இனியும் வாளாவிராது இலங்கையை எதிர்த்துப் போர்க்கோலம் பூணாவிடினும், சற்றுக் கடுமையாவது காட்ட வேண்டும். இனியும் இச் சிக்கல் பேச்சு வார்த்தைகள் மூலம் தீரும் என நினைப்பது தவறு.

இவையனைத்தையும் பார்த்துக்கொண்டு என்ன செய்வது எனத் தெரியாது இந்திய நாட்டுத் தமிழர்கள் திகைத்துக்கொண்டிருக்

# மதிப்புரை

## தமிழே முதன்மொழி

[ஆசிரியர்: இரா. வேங்கட கிருட்டினன், மேல்நிலை மின்பொறியியல் வல்லுநர், இலிபியா ; முதன்மொழிப் பதிப்பகம், திருச்சி—620 003. விலை: உரு. 45-00.]

மின்பொறியியல் அறிஞர் திரு. இரா. வேங்கட கிருட்டினன். தமிழ் மண்ணை விடுத்து, இலிபியா நாட்டில் பணியாற்றுபவர் ; அவர் இயற்றியுள்ள நூல் தமிழே முதன்மொழி ; அதன் வெளியீடோ முதன்மொழிப் பதிப்பகம் வழிப்பட்டது,

அச்சுப் பிழை திருத்துபவர் 'சொல்' என்பதைப் பதம் என்றும், அஞ்சல் என்பதைத் 'தபால்' என்றும் மாற்றம் செய்துவிட்டமையைச் சுட்டுகின்றார் ஆசிரியர் (413). அவர்தம் தனித்தமிழ் உணர்வுச் சான்று இது. தமிழே முதன்மொழி என்னும் முடிவில் முகிழ்த்த முகிழ்ப்பும் இது !

நூல் இரண்டு பகுதிகளையுடையது. முதற் பகுதி அடிப்படைக் கருத்துகளும் ஆராய்ச்சி விதிமுறைகளும் என்பது. இரண்டாம் பகுதி ஆங்கிலம் தமிழ்ச் சொற்பொருள் ஒப்பியல் மொழியாராய்ச்சி A முதல் Z வரை என்பது. பகுதிப் பிரிப்பாலேயே நூற்பொருளை வெளிப்படத் தெரிய வைத்துள்ளார் ஆசிரியர்.

அளவிறந்த அக்கறை, ஆழ்ந்த தமிழுணர்வு, அரிய உழைப்பு, அன்னைத் தமிழை அதற்குரிய முதன்மை இடத்தில் அமர்த்த எழுந்த முனைப்பு, சொல்லால் முழக்கிச் சோராமல் செயற்படுத்தும் சீர்மை, தனித்தமிழ் வழிபாடு என்பவற்றின் விளக்கமாகத் தமிழே முதன்மொழி வெளிப்பட்டுள்ளது.

"தூய பழந்தமிழ்ச் சொற்களைக் கொண்டது ஆங்கிலம். அஃதுலக மொழியாய்த் திகழ்கின்றது ; கொச்சைத் தமிழாக இருப்பது வடமொழி; ஆகலின் உலக வழக் கொழிந்தது ; தமிழே உலக முதன் மொழி" என்னும் அடிப்படைகளை நிறுவுகின்றது தமிழே முதன் மொழி. இவற்றை நிறுவுதற்காக ஆசிரியர் எடுத்துக் கொண்டுள்ள உழைப்பு உவந்து பாராட்டுதற்குரியது.

தமிழே முதன்மொழி என்னும் காத்துப் புதுவது அன்று. ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னரே பாவாணரால் 'முதல் தாய் மொழி' எழுதப்பட்டது. அதற்கு முன்னரே தவத்திரு ஞானப்பிரகாச அடிகளார், 'சொற்பிறப்பு ஒப்பியல் தமிழ் அகராதி' 'வாயிலாக வெளிப்படுத்தினர். முதன் மொழி என்னும் மாதிகை ஒன்றும் பாவாணரைச் சிறப்பாசிரியராகக் கொண்டு வெளிப்பட்டது. தமிழைத் தமிழர் தாமும் உணராதிருந்த காலையிலேயே மேலையாரியம், கீழையாரியம் திரவிடம் ஆகிய மொழிகளையெல்லாம் ஆய்ந்து தமிழின் முதன்மையை நிலைப்படுத்திய இவர்கள் உழைப்பு நினைவு கூர்தற்குரியன !

இவற்றையெல்லாம் அழுந்தப் பயின்று ஆங்காங்குச் சுட்டிச் செல்லும் ஆசிரியர் 'தமிழே முதன்மொழி' என்பது தம்மாலேயே முற்ற முடியக் காட்டப்பெற்றதாகத் தாமே பல்கால் கூறுவதைத் தவிர்த்துத் திறனாய்வாளர் பொறுப்புக்கே விட்டுக் கடமையாற்றி யிருந்தால் பெருஞ்சீர்த்தியாம்! ஆங்கிலத்தையும் தமிழையும் பெருக்கமாக ஒப்பிட்டு ஆய்ந்த ஆய்வில், பெருக்கமிக்கது இந் நூலே என்பதில் ஐயுறவில்லை. இந் நூலின் சுருக்கமேனும் ஆங்கில ஆக்கம் பெறுமானால் மொழியுலகில் ஒரு திருப்பம் ஏற்படும் என்று நம்பலாம். இவர்தம் உணர்வையும் உழைப்பையும் மதித்துப் போற்றும் முகத்தாலேனும் இத்தகு நூல்களைத் தமிழ்ப் பற்றுளர் கட்டாயம் வாங்குதலும் பயிலுதலும் வேண்டும்!

—இரா. இளங்குமரன்

---

'செந்தமிழ்ச் செல்வி' பற்றிய உரிமை விளக்கம்–1956 ஆம் ஆண்டுச் சட்டம் - விதி 8 - படிவம் 4இல் கண்டுள்ளபடி

1. வெளியிடும் இடம் : 261, இலிங்கிசெட்டித் தெரு, சென்னை 1
2. வெளியீட்டு முறை : திங்களிதழ்
3. அச்சிடுவோர் பெயர் : அப்பர் அச்சகம்
   இனம் : இந்தியர்
   முகவரி : 80, பிரகாசம்சாலை, சென்னை-108
4. வெளியீட்டாளர் பெயர் : தென்னிந்திய தமிழ்ச் சங்கம்
   இனம் : இந்தியர்
   முகவரி : 80, பிரகாசம்சாலை, சென்னை-108
5. ஆசிரியர் பெயர் : திரு. இரா. முத்துக்குமாரசாமி
   இனம் : இந்தியர்
   முகவரி : 80, பிரகாசம்சாலை, சென்னை-108
6. இதழ் உரிமையாளர்கள், மூலதனத்தில் நூற்றுக்கு ஒரு விழுக் காட்டிற்கு மேற்பட்ட பங்குகளுடைய பங்காளிகள் ஆகியோரின் பெயர்களும் முகவரிகளும்: தென்னிந்திய தமிழ்ச் சங்கம் (பதிவு)

மேலே தரப்பட்டுள்ள விளக்கங்கள் அனைத்தும் என்னுடைய முழு நம்பிக்கைக்கும் அறிவுக்கும் ஏற்ப உண்மையானவை என இரா. முத்துக் குமாரசாமியாகிய யான் உறுதியளிக்கிறேன்.

10—3—1985 (ஒப்பம்) இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிப்.,
பதிப்பாளர்.

---

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்காக
80, பிரகாசம் சாலை, சென்னை-108. அப்பர் அச்சகத்தில்
திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர் : இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிப்.

# செய்திகள்

## முதுபெரும் புலவர் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்கட்கு நினைவு அஞ்சலி

சென்னைப் புரசை சுந்தரர் தமிழ்க் கல்லூரித் தலைவரும், முது பெரும் புலவருமான கலைமாமணி, டாக்டர் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்கட்கு நினைவு அஞ்சலி செலுத்துமுகத்தான் 1-3-85 இல் புரசை கங்காதரேசுவரர் கோயில் தெருவிலுள்ள மாநகராட்சி உயர்நிலைப்பள்ளியில், சுந்தரர் தமிழ்க் கல்லூரி ஆசிரியர்கள், மாணாக்கர்கள் சார்பில், பேராசிரியர், பைந்தமிழ்க் காவலர் அ. கி. பரந்தாமனார் அவர்கள் தலைமையில் இரங்கல் கூட்டம் நடை பெற்றது. தமிழ்ப் புலவர் பெருமக்கள் பலர் உரையாற்றினர். கல் லூரிச் செயலர் புலவர் க. வா. சச்சிதானந்தம் நன்றி நவின்றார். இறுதியில் இரங்கல் தீர்மானமொன்றும் நிறைவேற்றப்பட்டது.

## கலைஞரின் 'குறளோவியம்' நூல் வெளியீட்டு விழா

டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி அவர்கள் 1956 முதல், முறையே முரசொலி, தினமணி கதிர், குங்குமம் ஆகிய இதழ்களில் தொடர்பாக எழுதிவந்த 'குறளோவியம்' என்னும் அரிய - பெரிய— அழகிய நூல் பாரதி பதிப்பகத்தாரால் பதிப்பிக்கப்பட்டு, அதன் வெளியீட்டு விழா 17—2—85 இல் சென்னை பெரியார் திடலில், பேராசிரியர் க அன்பழகன் அவர்கள் தலைமையில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. முனைவர் வ. சுப. மாணிக்கம் அவர்கள் நூலினை வெளியிட, தினகரன் ஆசிரியர் திரு. கே பி. கந்தசாமி அவர்கள் அதனைப் பெற்றுக்கொண்டார். முனைவர்கள், பேராசிரியர்கள், கவிஞர்கள் பலர் பாராட்டுரை வழங்கினர். இறுதியில் கலைஞர் ஏற்புரை ஆற்ற விழா இனிது நிறைவுற்றது.

## மாதவச் சிவஞான முனிவர் 200 ஆவது ஆண்டு விழா

விக்கிரம சிங்கபுரம், சைவநெறிக் கழகத்தின் சார்பில், விக்கிரம சிங்கபுரம் முதன்மைச் சாலை (மெயின் ரோடு)யில் உள்ள சிவஞான முனிவர் திருக்கோயிலில், சிவஞான முனிவரின் 200 ஆவது ஆண்டு விழா சிறப்பாக நடைபெற்றது. சிறப்பு வழிபாடுகளுக்குப்பின் பேராசிரியர் ஆ. அனந்தராசன் எம் ஏ., அவர்கள் "குருடாய்ப் பிறந்த உயிர்" என்னும் பொருள்பற்றிச் சிறப்புரை ஆற்றினார்.

## சிந்துவெளி நாகரிகக் கருத்தரங்கு மாநாடு

தென்கலை வளர்ச்சி மன்றத்தின் சார்பில் சென்னை மாவட்ட மைய தேவநேயப் பாவாணர் நூல் நிலையக் கட்டிட மாடியில் சிந்து வெளி நாகரிகம் (Indus valley Civilizatlon) பற்றி ஓர் அரிய கருத் தரங்கு 3—3—85 அன்று காலை—மாலை இரு வேளைகளிலும் நடை பெற்றது. வழக்கறிஞர் கே என். சீனிவாசன் அவர்கள் வரவேற் புரை நிகழ்த்தினார். மன்றச் செயலர் திரு மா. சு. சம்பந்தம் வழி மொழியப்பேரறிஞர் சாலை இளந்திரையன் அவர்கள் தலைமை ஏற்றார். திரு. ஊ. செயராமன் கருத்தரங்கைத் துவக்கி வைத்து அறிஞர்களை

✡

அறிமுகம் செய்து வைத்தார் மாண்புமிகு அமைச்சர் டாக்டர் நாவலர் நெடுஞ்செழியன் உள்ளிட்ட அறிஞர் பெருமக்கள் சிந்து வெளி நாகரிகம்பற்றிய அரிய கருத்துரை வழங்கினர். திரு. ஊ. செயராமன் அவர்கள் நன்றி நவில, இரவு 9-30 மணியளவில் கருத்தரங்கு இனிது நிறைவுற்றது.

## கவிஞர் பொன்னடியாருக்குப் பாராட்டு விழா

புரட்சிக் கவிஞரின் வழியில் உணர்ச்சிக் கவிஞராக விளங்கி, 'முல்லைச் சரம்' என்னும் இதழ் வாயிலாகப் பத்தொன்பது ஆண்டு களாக இலக்கியத் தொண்டாற்றிவரும் கவிஞர் பொன்னடியார் அவர்கட்கு 24—2—85 இல், இளங்கவிஞர்கள் சார்பில் சென்னை பாரதிய வித்யா பவனத்தில் பாராட்டு விழா நடைபெற்றது. முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம் தலைமை ஏற்க, மாண்புமிகு அமைச்சர் டாக்டர் நாவலர் நெடுஞ்செழியன் அவர்களும் மற்றும் அறிஞர் பலரும் பாராட்டுரை வழங்கினர். முத்தமிழ்க் காவலர் கவிஞர் பொன்னடியார் அவர்கட்கு ரூ. 50,000 கொண்ட பண முடிப்பொன்றை வழங்கிச் சிறப்பித்தார்.

## கழக நூலுக்குப் பரிசு

தமிழ்நாடு வேளாண்மைப் பல்கலைக்கழக மேனாள் துணைவேந்தர் டாக்டர் கோ. அரங்கசாமி அவர்கள் எழுதிக் கழக வெளியீடாக 1976 ஆம் ஆண்டு வெளிவந்த நுண்ணுயிர்கள் (Micro organisms) என்னும் நூலுக்கு மேனாள் இந்திய அரசு நிதியமைச்சர் சி. சுப்பிர மணியம் அவர்கள் தலைமையில் இயங்கும் தமிழ் வளர்ச்சிக் கழகம் சிறந்த அறிவியல் நூலுக்கு வழங்கும் இரண்டாவது பரிசினை வழங்கிச் சிறப்பித்துள்ளது.

## திருத்தம்

கோவை கிளை மேலாளர் திரு. மே. மீனாட்சி சுந்தரம் அவர்கள் மறைந்த தேதி 5—2—85 எனவும், அவருக்கு ஆண்மக்கள் இரு வரும், பெண்மக்கள் இருவரும் உளர் எனவும் திருத்திப் படித்துக் கொள்ளவும் (பரல் ௬, பக்கம் உ௫௭)

## மறைமலையடிகள் நூலக வளர்ச்சிக்கு நன்கொடை

(முன் இதழ் உ௫௬ ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | | |
|---|---|---|
| உயர்திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்கள் (கழக ஆட்சியர்) | 10 | 00 |
| திரு. ஆ. சுப்பையா பிள்ளை அவர்கள் (கழக மேலாளர்) | 5 | 00 |
| கயப்பாக்கம் திரு. முத்துலிங்கா ரெட்டியார் அவர்கள் | 5 | 00 |
| திரு. A. T. A. ஈஸ்வர் அவர்கள் | 5 | 00 |
| திருமுருக விசாக நம்பி அவர்கள் | 5 | 00 |
| ஆரன்குடி திரு. அ. ஆறுமுகம் அவர்கள் | 5 | 00 |
| கல்லை, தே. கண்ணன் அவர்கள் (ஆசிரியர் 'வள்ளுவர்வழி') | 5 | 00 |
| தூத்துக்குடி திரு. ந. ஆறுமுகம் பிள்ளை அவர்கள் (மாசி, பங்குனி) | 10 | 00 |

கின்றனர். இந்திய அரசும், தமிழக அரசும் இலங்கை அரசுடன் கலந்து பேசுவதின் மூலமாகவே இச் சிக்கலைத் தீர்த்துவிட முடியுமென்று நினைக்கின்றன. இலங்கையரசும் அதையேதான் செய்கின்றது. ஒருபுறம் இவர்கள் கலந்து பேசிக்கொண்டே இருக்க அதே சமயத்தில் ஈழத் தமிழர்களை அழித்துக்கொண்டே வருகிறது இலங்கை அரசு. நம் அரசுகள் பேசி முடிவுக்கு வருவதற்குமுன் ஈழமண் இருக்குமே தவிர ஈழத் தமிழர்கள் இருக்க மாட்டார்கள். இந்திய அரசும் இலங்கை அரசும் இவ்வகையில் ஒத்துப்போவதால் தமிழினம் அழிக்கப்படுமே தவிர வாழ வழி பிறக்காது. தமிழினத்தைக் காப்பாற்றத் தமிழ்மக்கள் இப்போதாவது ஒன்று திரளாவிடில் எதிர் காலத்தில் தமிழினம் அழிந்துவிடும் என்பது திண்ணம்.

இதே நிலைமை நீடித்தால் இரு அரசுகளும் பேசிக்கொண்டே காலங் கடத்தித் தமிழினத்தை அழிய விடுகின்றனர் போலும் என்ற எண்ணம் உலகத்தமிழ்ப் பெருங் குடியினரின் உள்ளத்தில் ஏற்பட்டு விடும். அது நல்லதன்று என்பதை மட்டும் தெரிவித்துக்கொள்கின்றோம்.

———

## "பாவாணர் பாதையில்..." ஒரு விளக்கம்

சென்ற செல்வி இதழில் (சிலம்பு 59, பக். 249) திரு. இரா மதிவாணன் எழுதிய கட்டுரையில்

"பல்—(பல்லு)—பலா=பல்பல்லாக வித்துகளைக் கொண்டது (இளங்குமரனார்)"

என்ற ஒரு மேற்கோளைக் கொடுத்துள்ளார். இஃது எந்த இடத்திலிருந்து எடுக்கப்பெற்றது என்பதை இடஞ் சுட்டி விளக்கவில்லை. இருப்பினும் இதுபற்றி ஆய்ந்தபோது புலவர் இளங்குமரனார் செல்வி 59, பரல் 2இல் (பக் 44) எழுதிய 'பல்' என்ற சொல்லாய்வுக் கட்டுரையில் 'பலா' என்பதன் விளக்கம் வந்துள்ளதைக் கண்டோம். ஆனால் திரு மதிவாணன் காட்டியுள்ளது போன்ற தொடர் அக் கட்டுரையில் இல்லை.

புலவர் இளங்குமரனார் தந்துள்ள விளக்கம் வருமாறு: "பல் போன்ற கொட்டையுடையதும், அவற்றையும் பலவாகக் கொண்டதும் பலா எனப்பட்டதாம். பர், பல், பலா என வரல் உண்மையால் அதற்குப் பருமைப் பொருளும் உண்டாம்" இவ் விளக்கம் இவ்வாறிருக்க திரு மதிவாணன் வேறுவகையில் மேற்கோளைக் காட்டியது மட்டுமன்றி 'பலா' என்பதற்குப் பருமைப் பொருளும் உண்டு என்ற இளங்குமரனார் கூற்றையே காணாததுபோல் விட்டுவிட்டு, 'பருத்த வடிவுடையது பலா' என்று பாவாணர் மட்டுமே கூறுவதுபோல் எழுதியுள்ளது வருந்தத்தக்கது. பிறரது கூற்றை மேற்கோளாகக் காட்டும்போது அதனை முழுதும் படித்து முற்றும் உணர்ந்து செய்வதே முறையாகும்.

—ஆசிரியர்

# நட்பும் பகையும்

[கழக இலக்கியச் செம்மல்,
புலவர் இரா. இளங்குமரன்]

நட்பு பகை என்பவை எதிரிடைகள். 'நள்' என்பதன் அடியாக நட்பும், பக்கு>பகு என்பதன் அடியாகப் பகையும் பிறக்கின்றன. முன்னது இணைதல் கருத்திலும் பின்னது பிரிதல் கருத்திலும் வருவன.

பகை என்பதற்குத் தமிழில் மிகப் பல சொற்கள் காணக் கிடக்கின்றன. அனைத்தையும் திரட்டவில்லை எனினும், அரிதின் முயன்று ஐம்பது சொற்கள் அளவு திரட்டிக் காட்டிய அகர முதலிகள் உள, ஆயின் இன்னும் அவ் வெண்ணிக்கையளவுள்ள சொற்கள் இணைக்கத் தக்கனவாக எஞ்சியுள்ளன.

பகை இவ்வாறாக, நட்பு என்பதற்கோ அவ் விரிந்த அகர முதலிகளும் கேண்மை, கேள், தொடர்பு எனச் சொல்லி அமைந்தன. இச் சுட்டும் சொல்லும் நண்பர்கள் வாய்த்தலின் சுருக்கப் பாட்டையும், பகைவர்கள் கிளர்தலின் பெருக்கப்பாட்டையும் சொல்லளவால் சுட்டுவனவாம்!

தமிழில் அமைந்துள்ள எதிர்ச் சொற்கள் பெரும்பாலும் அடியொற்றி அமைவன. ஆதலால் பகைச் சொல் கொண்டு நகைச் சொல் அல்லது நட்புச் சொல்லைக் கண்டுகொள்ளக் கூடுவதாம்.

நட்பியலைக் கருதினால் நெருங்குதல், பொருந்துதல், கலத்தல், ஒன்றுதல், நிலைத்தல் என்னும் படிமான வளர்ச்சியைக் காண இயலும். நெருங்குதலால் பொருந்துதலும், பொருந்துதலால் கலத்தலும், கலத்தலால் ஒன்றுதலும், ஒன்றுதலால் நிலைத்தலும் நிகழ்வனவாம்.

இவ்வண்ணமே, பகையியலில் நெருங்காமை, பொருந்தாமை, கலவாமை, ஒன்றாமை, நிலையாமை என்பவை ஏற்படுதலை அறியக் கூடும். நெருங்காமையால் பொருந்தாமையும், பொருந்தாமையால் கலவாமையும், கலவாமையால் ஒன்றாமையும், ஒன்றாமையால் நிலையாமையும் ஏற்படுதல் வெளிப்படையே.

நட்பியல் பகையியல் என்பவற்றை ஏரண முறையில் அல்லது இயற்கையொடு பொருந்திய அறிவியல் முறையில் ஆய்ந்து முந்தையோர் குறியீடு செய்துள்ளமை கொள்ளை மகிழ்வு தருவதாம்.

இதனை அறிந்து மகிழுமாறு நட்புப் பொருட் சொற்களையும் பகைப் பொருட் சொற்களையும் பட்டியலிட்டு இவண் சுட்டப்படுகின்றன வாம்.

தமிழிற் சொற்பஞ்சம் இல்லை! அவற்றைத் திரட்டி ஒழுங் குறுத்திப் போற்ருப் பஞ்சமே வழிவழி வாடாமல் வாய்த்துக்கொண் டிருக்கின்றது. சருக்கரை ஆலையாளனுக்குச் சருக்கரை நோய் வந்ததைப் போல்வது இது!

| நண்பர் | | பகைவர் |
|---|---|---|
| அகத்தர் | — | புறத்தர் |
| அகம்பர் | — | புறம்பர் |
| அகர் | — | பரர் |
| அகவர் | — | புறவர் |
| அடங்கினர் | — | அடங்கார் |
| அடுத்தார் | — | அடுக்கார், அடாதார் |
| அடைந்தார் | — | அடையலர், அடையார் |
| அண்டினர் | — | அண்டார் |
| அணுக்கர், அணுகினர், | — | அணுகார், அணுகலர் |
| அமர்ந்தார் | — | அமரார் |
| அரியலர் | — | அரிகள், அரிஞர் |
| அருகர் | — | அருகலர் |
| இகலார், இகலிலர் | — | இகலினர், இகலோர் |
| இசைந்தார், இசையுநர் | — | இசையார், இசைவிலார் |
| இணைந்தார் | — | இணையார், இரிஞர் |
| இயலுநர், இயன்ருர் | — | இயலார், இயலாதார் |
| இனியர் | — | இன்னர், இன்னதார் |
| உள்ளுநர் | — | உள்ளார் |
| உற்ருர் | — | உருர் |
| எண்ணுநர் | — | எண்ணலர், எண்ணர் |
| எதிரார் | — | எதிர்ந்தார், எதிரர், எதிரி |
| ஏலுநர், ஏன்ருர் | — | ஏலார், ஏற்கார் |
| ஒட்டுநர் | — | ஒட்டலர், ஒட்டார் |
| ஒப்புநர் | — | ஒப்பலர், ஒப்பார் |
| ஒல்லுநர் | — | ஒல்லார் |
| ஒவ்வுநர் | — | ஒவ்வலர், ஒவ்வார், ஒவ்வாதார் |

| | | |
|---|---|---|
| ஒன்றுநர் | — | ஒன்றலர், ஒன்ருர், ஒன்னலர், ஒன்ஞர் |
| கருதுநர் | — | கருதலர், கருதார் |
| குறுகுநர் | — | குறுகலர், குறுகார் |
| கூடுநர் | — | கூடலர், கூடார் |
| கேளிர் | — | கேளார் |
| கொள்ளுநர், கொள்வார் | — | கொள்ளலர், கொள்ளார் |
| சாருநர், சார்ந்தார் | — | சார்பிலார், சாரலர், சாரார் |
| சினமிலர், சினமிலி | — | சினத்தர், சினவர் |
| செருர் | — | செறுநர் |
| செற்றமிலார் | — | செற்ருர் |
| சேக்காளி, சேர்த்தாளி | — | சேராதார், சேரார் |
| சேர்ந்தார், சேர்ப்பாளர் | — | சேரலார், சேராதவர், செருநர் |
| தம்மோர் | — | அயலர் |
| தரியர், தரிஞர் | — | தரியலர், தரியார் |
| திருந்திஞர் | — | திருந்தலர், திருந்தார் |
| துன்னிஞர் | — | துன்னலர், துன்ஞர் |
| தெரிந்தார், தெரியுநர் | — | தெரியலர், தெரியார் |
| தெவ்விலர் | — | தெவ்வர், தெவ்வார், தெவ்விஞர் |
| தெருர் | — | தெறுநர், தெறுவர் |
| தேறுநர், தேறுவார் | — | தேறலர், தேருர் |
| தொடர்பார் | — | தொடர்பிலார் |
| தொடருநர் | — | தொடரார் |
| தொடுத்தார் | — | தொடுக்கார் |
| தொடுப்பர் | — | தொடுக்கிலார், தொடுப்பிலார் |
| நகைவர் | — | பகைவர் |
| நசைவர் | — | நசையிலி |
| நட்டார், நட்பர், நட்பாளர் | — | நள்ளார், நட்பிலி |
| நண்ணுநர் | — | நண்ணலர், நண்ணுர் |
| நண்பாளர் | — | நண்பிலார், நண்பிலி |
| நணியர் | — | சேயர் |
| நணுகுநர் | — | நணுகலர், நணுகார் |

| | | |
|---|---|---|
| நயத்தார், நயவர் | — | நயனிலி, நயவார் |
| நள்ளுநர் | — | நள்ளார், நள்ளாதார் |
| நிகரர் | — | நிகரார், நிகரலர் |
| நேர்நர், நேரர் | — | நேரலர், நேரார், நேராதார் |
| நோனுநர் | — | நோலார், நோனர் |
| பகையார், பகையிலி | — | பகைஞர் |
| பசையுநர் | — | பசையார், பசையிலி |
| பற்றுநர் | — | பற்றலர், பற்றிலி |
| புல்லினர் | — | புல்லார், புல்லாதார் |
| பேசுநர் | — | பேசார், பேசலர், பேச்சிலார் |
| பேணுநர் | — | பேணலர், பேணர் |
| பொருந்துநர் | — | பொருந்தலர், பொருந்தார் |
| பொருவுநர் | — | பொருவார் |
| மருவுநர் | — | மருவலர், மருவார் |
| மன்னுநர் | — | மன்னலர், மன்னுதார் |
| மாண்பர், மாணர் | — | மாணலர், மாணர் |
| மாறிலர், மாறிலி | — | மாற்றலர், மாற்ரர் |
| முட்டார் | — | முட்டுநர் |
| முரண்டார், முரணர் | — | முரண்டர், முரணர் |
| முனியலர் | — | முனிந்தார் |
| முனைவிலர் | — | முனைந்தார் |
| மேவுநர் | — | மேவலர், மேவார் |
| மோதார் | — | மோதுநர் |
| வட்கிலர் | — | வட்கார் |
| வணங்குநர் | — | வணங்கலர், வணங்கார் |
| வீடலர் | — | விட்டார், விடுநர் |
| வேண்டுநர் | — | வேண்டலர், வேண்டார் |

பகைமை, பகைவர் சுட்டிய சொற்களுக்கெல்லாம் பெரும்பாலும் பழஞ்சொல் ஆட்சியுண்மை கழக நூற் பயிற்சியாளர் காணத் தக்கனவே. அரிதாக வழக்குச் சொற்களும் இயைக்கப்பெற்றுள. (எ-டு) சேக்காளி, சேர்த்தாளி, பேசார் தொடுப்பர்.

———

# செந்தமிழ்ச் செந்நெறி

[பேராசிரியர் மா சண்முகசுப்பிரமணியம்]

சொற்கோவும் தோணிபுரத் தோன்றலுமென் சுந்தரனும்
சிற்கோல வாதவூர்த் தேசிகனும்—முற்கோலி
வந்திலரேல், நீறெங்கே? மாமறைநூல் தானெங்கே?
எந்தைபிரான் ஐந்துஎழுத்தெங் கே?

நாவுக்கரசரும் ஞானசம்பந்தரும் சுந்தரரும் வாதவூரடிகளும் தேவார, திருவாசகப் பாடல்களை உலகுக்கு அளிக்காமல் போனால், திருநீறும் அருமறைகளும் ஐந்தெழுத்தும் இறைமை உணர்வும் என்றோ மறைந்து போயிருக்கும்'' என்ற பேருண்மையினைக் கூறுகின்றது இப்பழம் பாடல்.

இந்த உண்மையினை, ஆத்திகர்களாகிய நாம் உணர்ந்துள்ளோமா?

திருமறைப் பதிகங்கள் ஒவ்வொன்றின் இறுதியிலும் அப்பாடல்களின் பெருமை கூறப்பட்டுள்ளது.

திவ்யப் பிரபந்தத்தில் தலைமையாக விளங்குவது திருவாய்மொழி. ''ஆன்ற தமிழ்மறைகள் ஆயிரம்'' என்று இது போற்றப் பெறுகின்றது. இதுவே, வைணவ சித்தாந்தத்திற்குப் பிரமாண நூலாக இயங்குகிறது. இதனை அருளிச் செய்த நம்மாழ்வார், இவ்வருட்பாடல்களை ஓதுவோர் பிறவிப் பெருங்கடலை உறுதியாக நீந்துவார்கள் என்று நமக்கு உணர்த்துகின்றார் :

''மாதவன் பால் சடகோபன்
தீது அவம்இன்றி உரைத்த
ஏதமில் ஆயிரத்து இப் பத்து
ஓத வல்லார் பிறவாரே.'' (1-6-11)

''தமிழ் ஞானசம்பந்தன்'' என்று தம்மைக் குறித்துக்கொண்டு சிவஞானம் பாடும் திருஞானசம்பந்தர், தம் அருட்பாடல்களைப் பாடுவோரின் பாவங்கள் அற்றுப்போகும் என்கிறார் :

''...............................
நாடவல்ல தமிழ் ஞான சம்பந்தன்
பாட வல்லார் களுக் கில்லை பாவமே.'' (திருவிற் கோலம்)

''நாவலூரன் பாடிய இன்தமிழ்ப் பாடல்களைப் பாடுவோரின் அருவினைகள் அற்றுவிடும்'', என்று உணர்த்துகின்றார் சுந்தரர் :

"...... .........
நாடி இன்தமிழால் நாவல ஊரன்சொல்
பாடல்கள் பத்தும் வல்லார் தம்வினை பற்றறுமே."
(திருக்கூடலை யாற்றூர்)

இவ்வாறு, ஒவ்வொரு பதிகத்தின் இறுதியிலும் அப் பாடல்களின் பெருமையினை நமக்கு உணர்த்தும் வகையில் நாயன்மார்களும் ஆழ்வார்களும் உறுதிபட உரைத்துள்ளார்கள்.

அந்த உண்மையினை ஓர்ந்து உணர்ந்து நாம் உய்ந்துள்ளோமா?

* * *

திருமுறைகளையும் திவ்யப் பிரபந்தப் பாடல்களையும் அருட் பாடல்கள் என நாம் போற்றுகின்றோம்.

ஆனால், அவை துதிப்பாடல்களாக மட்டுமே துளங்குகின்றனவா? அல்லது, உள்ளுறைவான இறைமை நெறி அவற்றில் ஒளிர்கின்றதா?

அவ்வாறு ஒளிர்ந்தால் அது எத்தகைய நெறி?

அதற்கு முன் நிலவிய ஆன்மீக நூல்களில் கூறப்பட்ட தத்துவங்களில் இருந்து அந்நெறி மாறுபட்டதா?

மாறுபட்டிருந்தால் அது எத்தகைய மாறுபாடு?

வேதகால முனிவர்களால் போதிக்கப்பட்டுள்ள இறைமை ஞானம் உபநிடத நூல்களில் உச்சநிலையினை அடைந்துவிட்டதே, அதைவிட உயர்ந்த ஞானம் வேறென்ன இருக்கமுடியும்?

எனில், நாயன்மார்களும் ஆழ்வார்களும் உபநிடத ஞானத்தையே மீண்டும் உரைத்துள்ளனரா? அல்லது புதிய நெறியினைப் போதித்துள்ளனரா?

அவர்கள் வகுத்துள்ளது புது நெறி என்றால் அது என்ன?

இவற்றைப் பற்றி ஆய்ந்து காண்பதே "செந்தமிழ்ச் செந்நெறி" என்ற இக் கட்டுரைத் தொடரின் நோக்கமாகும்.

* * *

மெய்யடியார்களான நாயன்மார்களும் ஆழ்வார்களும் காட்டும் நெறியினைச் "செந்தமிழ்ச் செந்நெறி" என்று நாம் ஏன் கூறுகின்றோம்?

"செந்தமிழ்", (திருக்கழிப்பாலை) "அருந்தமிழ்" (திருவெண் காடு), "திருநெறிய தமிழ்" (திருப்பிரமபுரம்), "குலமார் தமிழ்" (திருப்பிரமபுரம்), "தண் தமிழ்" "தமிழ் மாலை" (திருப்பிரமபுரம் என்றே தாம் அருளியுள்ள பாடல்களை ஞானசம்பந்தர் குறிப்பிடு கின்றார்.

"தமிழ்" (திருக்கடவூர்). "நற்றமிழ்" (திருக்கடவூர் மயானம்), "தமிழ் மாலை" (திருக்குருகாவூர்), "பன்னு தமிழ்" (திருக்கச்சூர்), "பாவணத் தமிழ்" (திருஓண காந்தன் தளி), என்று தம் அருட் பாடல்களைச் சுந்தரர் குறிப்பிடுகின்றார்.

"நாளும் இன்னிசையால்
தமிழ் பரப்பும் ஞான சம்பந்தன்"

என்று ஞானசம்பந்தரின் பெருமையினைப் பரவுகின்றார் சுந்தரர்.

தம் பாடல்களை "பன்னிய நூல் தமிழ் மாலை" என்று குறிப்பிடு கின்றார் நாவுக்கரசர். (திருச் செங்காட்டங்குடி).

"செந்தமிழ்" (6-5-11), "ஒண் தமிழ்" (7-8-11), "வண் தமிழ்" (4-5-10), "தமிழாயிரம்" (2-8-11), "இன் தமிழ்" (7-9-1) என்று, தாம் அருளிச் செய்த திருவாய்மொழிப் பாடல் களைக் கூறுகின்றார் நம்மாழ்வார்.

எனவே, அடியார்கள் வழிநின்று அவர்தம் அருட்பாடல்களைச் "செந்தமிழ்" என்று நாமும் குறிப்பதே பொருந்துவதாகும்.

"வென்றிலேன் புலன்களைந்தும் வென்றவர் வளாகந்தன்னுள்
சென்றிலேன் ஆதலாலே செந்நெறி அதற்கும் சேயேன்"
(பொது)

என்று பாடுகின்றார் நாவுக்கரசர். இறைமையினை எய்தும் நெறி யினைச் "செந்நெறி" என்கிறார் அடிகள்.

"நெறி அல்லா நெறிதன்னை நெறியாக நினைவேனை"
(51-2)

என்று பாடும் மாணிக்கவாசகர் இறைவனை எய்தும் வழியினை "நெறி" என்றே கூறுகின்றார்.

இறைமையினை இதயத்தில் இசைத்து நிற்போரை "நெறிகொள் சிந்தையர்" என்கிறார் ஞானசம்பந்தர், (திருத்தெங்கூர்)

எனவே, மெய்யடியார்களான நாயன்மார்களும் ஆழ்வார்களும் பாடியருளியுள்ள ''செந்தமிழ்'' காட்டும் இறைமை நெறியினைச் ''செந்தமிழ்ச் செந்நெறி'' என்று நாம் குறிப்பிடுகின்றோம்.

* * *

தாம் பாடியுள்ள அருட்பாடல்களை எதனால் ''தமிழ்'' என்றும், ''செந்தமிழ்'', ''தண்தமிழ்'', ''தீந்தமிழ்'' என்றும் அடியார்கள் குறிப்பிட்டுள்ளனர்?

இதுபற்றிச் சிறிது சிந்தித்தால் ஒருண்மை புலனாகும்.

''பக்தி நெறி'' பரவிய காலம் கி. பி. 5ஆம் நூற்றாண்டி லிருந்து தொடங்கியது என்று வரலாற்று அறிஞர்கள் கூறுவார்கள்.

இதற்கு முன்னர், தமிழ்நாட்டில் புத்தமதமும் சமண சமயமும் கணிசமான அளவு பரவியிருந்தது என்பதை வரலாறு கூறுகின்றது.

ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாக ஒப்பற்ற மெய்ஞ்ஞானக் கருத்துகளைக் கூறும் இந்து சமயம் ஏன் மககளிடையே அன்று வலுவிழந்து போயிற்று?

கி. மு. மூன்றாம் நூற்றாண்டில் கலிங்கத்துப் போரில் நிகழ்ந்த கொடுந் துன்பங்களைக் கண்டவுடன் அசோகச் சக்கரவர்த்தி அகம் நெகிழ்ந்து அகிம்சையின் உயர்வினை உணர்ந்து, புத்தமதத்தைத் தழுவினான் என்பது வரலாறு. அப்படியானால், இந்துமதம் அகிம்சையைப் போதிக்கவில்லையா? அன்பு நெறியே அறநெறி என்று அழுத்தமாகக் கூறுகிறது. இந்து சமயம் என்ற உண்மை ம்ன்னர் மன்னனான அசோகனுக்குத் தெரியாதுபோனதன் காரணம் என்ன?

காரணம் வேறொன்றும் இல்லை, இந்து சமயத்தின் சாரம் மக்களிடையில் மறைக்கப்பட்டிருந்தது. சாரம் இல்லாத சடங்குகள் மட்டுமே மக்களிடையே பரவியிருந்தன. மேலும், இந்து சமயக் கோட்பாடுகள் எல்லாம் வடமொழியான சம்ஸ்கிருதத்தில் இருந்தன. வடமொழியில் புலமை பெற்றிருந்த ஒரு சிலரே உண்மையான இந்து சமயத்தின் உயர்வினை அறிந்திருந்தார்கள். சாதாரண மக்களுக்கு இந்து சமயத்தின் கொள்கைகள் மறைபொருளாகவே இருந்தன. எனவே, மக்களுக்குத் தெரிந்த மொழியில் பரப்பப்பட்ட சைன, புத்தமதக் கோட்பாடுகள் மக்களிடையே விரைவாகப் பரவின.

இதே காரணத்தால்தான், தமிழ்நாட்டிலும் சமண மதமும், புத்த மதமும் மக்களிடையேயும் மன்னர்களிடையேயும் வளரத் தொடங்கின.

இந்நிலையில்தான் பக்திநெறி என்ற முக்திநெறி தென்னகத்தில் தோன்றியது. பக்தி நெறியினைப் பரப்பிய பரம ஞானிகளான நாயன் மார்களும் ஆழ்வார்களும் தீந்தமிழிலே தெள்ளமுதமாகத் தெய்வ நெறியினை மக்களுக்குப் புகட்டினார்கள். இறைமை நெறியினை இனிய தமிழிலே எடுத்தோதினார்கள்.

இறைவனை, ''ஆராவமுதன்'' என்றார்கள். ''இன்பன்'' என்றும் ''அன்பன்'' என்றும் ஏத்தினார்கள். அருமறைகளுக்கும் அப்பாற்பட்டவன் இறைவன், எனினும், அவனை எண்ணி உருகும் அடியார்களுக்கு அவன் எளியவன், என்பதை வலியுறுத்திக் கூறினார்கள். ''எளிவரும் இயல்வினன்'', என்று இறைவனின் எளிமையினைக் காட்டினார்கள். ''உருகும் அடியார் உள்ளத்து உள்ளான் இறைவன்'', என்ற அடியார்களின் வாக்கு மக்கள் உள்ளங்களிலெல்லாம் ஒளி விளக்கினை ஏற்றியது! இவ்வாறு மக்கள் உள்ளங்களில் ஊற்றெடுத்துப் பெருகிய பக்தி வெள்ளத்திலே சமண சமயமும் புத்த சமயமும் மூழ்கி மறைந்தன.

தென்னாட்டிலே தோன்றிய இப் பக்தி வெள்ளம் பாரத நாடெங்கும் பரவியது. வேமனா, புரந்தரதாசர், மீரா போன்ற ஞானிகள் என்றும் அழியாத பக்திப் பாடல்களை அவரவர்களின் தாய்மொழிகளில் பரப்பிப் பாரதநாட்டின் பண்டைய சமயத்தை மீண்டும் மக்களிடையே நிலைபெறச் செய்தனர்.

தென்னாட்டில் பக்திநெறி பரப்பிய பைந்தமிழைத் ''தெய்வத் தமிழ்'' எனப் போற்றினார்கள்.

''வடமொழியும் தென்தமிழும்
மறைகள் நான்கும் ஆனவன்'' (திருச்சிவபுரம்)

என்று இறைவனை ஏத்துகின்றார் நாவுக்கரசர்.

''பண்ணார் இன்தமிழாய்ப் பரமாய பரஞ்சுடரே''

என்று பாடுகின்றார் சுந்தரர்.

''செந்திறத்த தமிழோசை வடசொல்லாகி''

என்று திருநெடுந்தாண்டகத்தில் பாடுகின்றார் திருமங்கை ஆழ்வார்.

''ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்''
(திருமறைக்காடு)

என்று இறைவனைத் தமிழனாகவும் ஆரியனாகவும் பாடுகின்றார் நாவுக்கரசர்.

இவ்வாறு, இறைவனைத் ''தமிழன்'' என்றும் ''தமிழ்மொழி'' என்றும் அடியார்கள் ஏத்துவதன் பொருள் என்ன?

இறைமை நெறி மக்கள் மொழியான தமிழில் பரவாததால் தெய்வ நம்பிக்கையில்லாத பிற சமயங்கள் மக்களை ஈர்த்தன. அதைத் தடுக்க முற்பட்ட அடியார்கள் இறைமை நெறியினை இன்தமிழில் பாடினார்கள், பரப்பினார்கள்.

இறைவனை இனிய தமிழிலே கண்டார்கள், இன்தமிழாகவே கொண்டார்கள். எனவேதான்,

''நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும்
ஞான சம்பந்தன்'' (திருக்கோலக்கா)

என்று சம்பந்தரின் பெருமையினைக் கூறுகின்றார் சுந்தரர். சம்பந்தர் பரப்பிய இறைமை ஞானத்தைத் தமிழாகக் காண்கிறார் சுந்தரர்.

இறைமை நெறியினை இனிய தமிழிலே பாடியதோடு மட்டுமன்றி, இறைமையினை மக்கள் எய்தி ஏற்றம் பெறுவதற்கு எளிமையான வழியினையும் எடுத்தோதினர் மெய்யடியார்கள்.

இறைவனை எய்துவதற்கென்று நாம் காட்டிற்குச் செல்ல வேண்டாம், கடுந்தவம் செய்ய வேண்டாம்; வீட்டிலே இருந்து கொண்டு விரும்பி நினைத்தாலே போதும். ''நினைப்பவர் மனம் கோயிலாக் கொண்டவன்'', இறைவன். அவன் ''நினைப்பவர் நெஞ்சினுள்ளான்'', ''சிந்திப்பார் சிந்தையுள்ளான்'', ''உள்குவார் உள்ளத்தான்''. அவன், நான்மறைகளாலும் அணுக முடியாதவன்; ஆனால் அடியார்களுக்கு எளியவன். அன்பினால் அன்றி இறைவனை எய்துதல் இயலாது.—இவ்வாறு, அன்பு நெறியான பக்தி நெறியினை மக்களுக்குப் புகட்டினர், அடியார்கள்.

அன்பர்களைத் தவிர வேறு எவராலும் அறியமுடியாதவன் ஆனந்தமூர்த்தியான இறைவன், என்று அறுதியிட்டுக் கூறுகின்றார் மணிவாசகர்.

''யாவராயினும் அன்பர் அன்றி
அறியொணா மலர்ச் சோதியான்'' (சென்னிப்பத்து)

என்பது மணிவாசகம்.

''பத்துடை அடியவர்க்கு
எளியவன், பிறர்களுக்கு அரியவித்தகன்'' (1-3-1)

என்பது நம்மாழ்வார் வாக்கு.

வேதங்கள் ஓதியும் பயனில்லை, வேள்விகள் செய்தும் பயனில்லை, நீதி நூல்கள் பல கற்றாலும் பயனேதும் இல்லை. அன்

போடு ஈசனை உள்ளத்திலே நினைவார்களுக்குத்தான் இறைவனருள் உண்டு, என்பதைத் தெளிவாகப் பாடுகின்றார், அப்பரடிகள்.

''வேதம் ஓதிலென், வேள்விகள் செய்கிலென்,
நீதி நூல்பல நித்தம் பயிற்றிலென்,
ஓதி யங்கமோர் ஆறும் உணரிலென்,
ஈசனை உள்கு வார்க்கன்றி இல்லையே.'' (பொது)

''அன்பனே. அரனே என்று நினைந்து அரற்றுவார்க்கு இன்பனாகின்றான் இறைவன்'', என்கிறார்.

''அன்பனே அரனே என்று அரற்றுவார்க்கு
இன்ப னாகும் எறும்பியூர் ஈசனே'' (திருவெறும்பியூர்)

''ஆரு அன்பில் அடியேன் உன்
அடிசேர் வண்ணம் அருளாயே'' (6-10-2)

என்று அன்பு நெறியினைப் புகட்டுகின்றார் நம்மாழ்வார்.

இவ்வாறு, வேதங்கள் கற்பது, வேள்விகள் இயற்றுவது, இவற்றைவிட, இன்பனான இறைவனை அன்பனாக நினைந்து அகம் நெகிழ்வதே இறைவனை எய்தும் எளிமையான நெறியாகும் என்று பக்தி நெறி பரவிய பரமஞானிகள் இடையறாது எடுத்தோதினார்கள். தலங்கள் பல சென்றார்கள், தண்தமிழில் பாடினார்கள்.

இதன் பயனாகத்தான், கற்கோவில்களும் கலைச் சிற்பங்களும் அன்று தோன்றி இன்றளவும் உள்ளன; இறைமையுணர்வும் எண்ணற்ற மக்களின் இதயங்களில் ஏதோ ஓரளவு நிலவுகின்றது.

இத்தகைய ஏற்றமிக்க அன்பு நெறியான பக்தி நெறியினை, ''செந்தமிழ்ச் செந்நெறியினை'', உணர்ந்து கண்டு உய்வோமாக.

(தொடரும்)

---

## மருத்துவருக்கு நன்றி

[பேராசிரியர் மு.ரா. பெருமாள் முதலியார்]

மண்தனில் பார்வை யற்றோர் மாதுயர் கண்டா லென்றன்
கண்களில் ஈரம் கொஞ்சம் கசிந்ததுண் டவற்றில் தீய
வெண்புரை விழுந்த தாலே மருத்துவ மேதை உன்னை
அண்டினேன் குறையைத் தீர்த்தாய் ஆனந்தக் கண்ண வாழ்க !

பார்வையை இழந்து விட்டால் பகலுநீள் இரவாய் மாறும்
ஆர்வமாய்ப் பார்க்க நின்ற அழகிய காட்சி யெல்லாம்
காரிருள் போர்த்துக் கொள்ளும் கடுந்துயர் மனத்தில் மண்டும்
பார்வைமீட் டளிக்கும் உந்தன் பணியினைப் புகழ்தல் ஆமோ !

# பெருங்கவிக்கோ டாக்டர் வா. மு. சேதுராமன் பொன்விழா

பன்னாட்டுத் தமிழுறவு மன்ற அமைப்பாளர் டாக்டர் வா. மு. சேதுராமன் அவர்களின் பொன் விழா, பிப்ரவரி 9, 10ஆம் நாட்களில் சென்னைப் பெரியார் திடலில் சீருஞ்சிறப்புமாக நடைபெற்றது. இசையரங்கு, பாட்டரங்கம், நூல் வெளியீடு, ஆய்வரங்கம், பட்டி மன்றம், கருத்தரங்கம், கவிஞர் பெருமக்களுக்குப் பாராட்டு விழா, பொற்கிழி வழங்கும் விழா என்று பற்பல நிகழ்ச்சிகளுடன் ஒரு மாநாடு என்னுமளவிற்கு நடைபெற்றது குறிப்பிடத் தக்கது.

முதல் நாள் பாட்டரங்கத்தைக் கவிவேந்தர் மு. மேத்தா துவங்கி வைக்க, டாக்டர் மா. செங்குட்டுவன் வரவேற்புரை நிகழ்த்த, கலைமாமணி கு. மா. பா. தலைமை தாங்கப் பெருங்கவிக்கோவின் சாதனைகள் என்னும் பொருள்பற்றி ஏறத்தாழ 25 பெருமக்கள் உரை நிகழ்த்தினர். பேராசிரியர் மே. வீ. வே. சக்கரவர்த்தி அவர்கள் நன்றி நவில முதல் நிகழ்ச்சி நிறைவுற்றது.

அடுத்துப் பெருங்கவிக்கோவின் 'சிந்தனைச் சுடர்' என்னும் நூல் வெளியீடு, முனைவர் ந. சஞ்சீவி அவர்கள் தலைமையில் நடைபெற்றது. டி. இராஜேந்தர் சிறப்புரை ஆற்ற ஏறத்தாழ 20 பெருமக்கள் வாழ்த்துரை வழங்க, டாக்டர் கு. மோகனராசு நன்றி நவில இரண்டாவது நிகழ்ச்சி நிறைவுற்றது.

இரண்டாம் நாள் நிகழ்ச்சியாக, முனைவர் ஔவை நடராசன் அவர்கள் தலைமையில் பெருங்கவிக்கோ கவிதைகளின் ஆய்வரங்கம் நடைபெற்றது. மூவேந்தர் முத்து, தமிழ்த்தொண்டர் கோ. முத்துப் பிள்ளை, முனைவர் ச. வே. சுப்பிரமணியம் ஆகியோர் சிறப்புரைக்குப் பின் பெருமக்கள் பலர் சொற்பொழிவாற்றினர்.

அடுத்து, சிலம்பொலி செல்லப்பனார் அவர்களை நடுவராகக் கொண்டு, பட்டிமன்றமும் பெருங்கவிக்கோவின் அருந்தொண்டு பற்றிய கருத்தரங்கும் நடைபெற்றன. நீதிபதி எஸ். மோகன் அவர்கள் தொடக்கவுரை ஆற்றினார். டாக்டர் விக்ரமன் தலைமை ஏற்றார். க. பட்டாபிராமன், முனைவர் ஏ. என். பெருமாள், டாக்டர் மா. செங்குட்டுவன், பெரும்புலவர் இர. திருஞானசம்பந்தன், முனைவர் அரு. கோபாலன், பேராசிரியர் வீரப்பன், கழக ஆட்சியர் இரா. முத்துக்குமாரசாமி அவர்கள், டாக்டர் த. கோவேந்தன், பேராசிரியர் மே. வீ. வே. சக்கரவர்த்தி ஆகியோர் பல்வேறு பொருள் பற்றி உரையாற்றினர்.

பேராசிரியர் க. அன்பழகன் அவர்கள் பொற்கிழியினை வழங்கினார். அறிஞர்கள் வாழ்த்துரை வழங்கினர்; பெருங்கவிக்கோ ஏற்புரை ஆற்றினார். ஓவியர் மா. முத்து நன்றி நவில விழா இனிது நிறைவுற்றது.

---

## பெரும்புலவர் பிரிந்தெங்கே சென்ருர் ?

[கவிஞர். வி. மு. உலகநாதன்]

புலவரெலாம் உணர்ந்தறியாப் பிழைகள் தம்மைப்
புலப்படுத்தி அழகுறவே திருத்தஞ் செய்து
நலமுற்று விளங்கிடவே தமிழைப் பேணி
நல்லறிஞர் பலர்புகழப் பெருமை கண்டு
நிலவுலகில் தமிழ்மண்ணில் நிலைத்த சான்ரேர்
நேர்த்தியுறத் திருக்குறளின் நெறியில் வாழ்ந்த
இலக்கணமா மலையேதான் சாய்ந்த தம்மா !
இனியிங்கே தமிழ்மொழிக்குக் கதியா ரம்மா !

துணிபுடைச்சொல் லேர்உழவர் ஒழுக்க முள்ள
தூயவரே "இலக்கணத்தாத் தா,வே சிந்தா
மணிச்செல்வர், "செந்தமிழ்க் களஞ்சி யம்,நல்
வைணவச்சங் கத்தலைவர், உயர்க லைமா
மணி,"புலவர் குழுத்தலைவர், முனைவர், எங்கள்
மகாவித்துவான் மே வீ வே குன்றி லிட்ட
மணிவிளக்கம் அணைந்தேதான் மறைந்த தாலே
வண்டமிழர் வாழ்விலிருள் சூழ்ந்த தம்மா !

சீலமுள்ள தமிழ்நிலத்தில் இலக்க ணத்தில்
சீர்த்தியுற்ற தாத்தாவோ இன்பம் தந்த
ஆலமரம் வீழ்ந்ததையோ இனிதான் இங்கே
அருந்தமிழைக் காப்பவர்யார் ? தெரிந்தோ மில்லை !
வாலறிவார் பதிப்பிக்கும் துறையில் மன்னர்
வழங்கியநன் னூலெல்லாம் தூய்மை யெய்தி
காலமெல்லாம் நிலைபெறவே செய்தார் தாமே
கண்ணபிரான் அடிநிழலில் அமர்ந்தார் அம்மா !

---

## உன் ஆவியே துணை !

மே. வீ. வே. என்றுரைக்கும் மேலோனே நின்னையே
மேவியே யானின்று மேன்மைபல—மேவினேன்
ஆவிநீ நீங்கியபின் அத்தனையும் ஏனெனக்குன்
ஆவியே தான்துணை யாம்.

புலவர். க. வர. சச்சிதானந்தம்,
செயலர், சுந்தரர் தமிழ்க் கல்லூரி, புரசை.

# பாவாணர் பாதையில்....

[பேராசிரியர் இரா. மதிவாணன்]

(முன் இதழ் உரு௦ஆம் பக்கத் தொடர்ச்சி)

பாவாணர் அகரமுதலியின் தனித் தன்மைகள் :

1. தனித்தமிழ் அகரமுதலியாக அமைதல், கொச்சைத் தமிழ், கொடுந்தமிழ்ச் சொற்களுக்குச் செந்தமிழ் வடிவம் மீட்டமைத்தல்.

| எ - டு : | கொச்சை : | செந்தமிழ் : |
|---|---|---|
| | ராவடி | அடாவடி (அடாவடி—டாவடி— ராவடி) |
| | ஆப்பை | அகப்பை. |

2. பெரும்பாலான சொற்களுக்கு மொழிநூன்மரபும் ஏரண (logic) நெறியும் தழுவி வேரும் வரலாறும் வரைதல். வேர் காணும்போது பாவாணர் புதிதாகக் கண்டறிந்த வேர்மூலச் சொற்பிறப்பியல், பொருட்பாட்டு வடிவமீட்டமைப்புச் சொற்பிறப்பியல் (Root tracing Etymology and Reconstructed Etymology on Semantic basis) நெறிமுறைகளை முழுமையாகப் பின்பற்றுதல்.

எ-டு : (1) விரல்—விள்—விரி—விரல் (விரல்—விரிக்கக்கூடியது) } வேர்மூலச் சொற்பிறப்பு

(2) தாத்தா—அத்தன் + அத்தன் —அத்தத்தன் – தாத்தன்—தாத்தா (அத்தன் = தந்தை) } வடிவமீட்டமைப்புச் சொற்பிறப்பு

3. சொற்களுக்கு அரைக் கலைக்களஞ்சிய அமைப்பில் விளக்கம் தருவதோடு சொற்களின் சரியான பலுக்கத்தைக் (pronunciation) குறிக்க எழுத்துப் பெயர்ப்பு தராமல் முதன் முதலாக ஆங்கிலத்தில் ஒலி பெயர்ப்பு தரப்படல்.

எ - டு : எழுது eludu ஒங்கு ongu

4. பிற அகரமுதலிகளிலுள்ள பிழைகளைத் திருத்துதல், ஒரு பொருளின் வகைகளை ஒரே இடத்தில் குறித்தல்.

சான்றாக 'அவரை' என்னும் சொல்லின்கீழ் 21 வகை அவரைகளின் பெயரும் தரப்படும். ஏரண (logic) முறைப்படி சொற்பொருள் குறித்தல்.

எ - டு: பள்ளி—படுக்கை (முதற்பொருள்)
பள்ளி—இடம் (இறுதிப்பொருள்)

5. பெரும்பாலான திரவிட மொழிகளிலிருந்து இனச் சொற்கள் குறிக்கப்படுவதோடு அகரமுதலி வரலாற்றி லேயே முதன்முதலாக உலகிலுள்ள வேற்றுக்குடும்ப மொழிகளிலிருந்தும் ஏற்ற இனச்சொற் காட்டுதல். தமிழில் கலந்துள்ள அனைத்துப் பிறமொழிச் சொற்களுக்கும் தூய தமிழ்ச்சொற் காட்டுதல்.

6. ஞாலமுதன்மொழியின் தோற்றம், எம்மொழிச்சொல் எம்மொழிக்குச் சென்றுள்ளதென்பதைக் கண்டறிதற் கான வரையறை, சொற்களின் காலவரையறை, தமிழ்ச் சொற்களில் திரிபுகள் ஆகிய ஆராய்ச்சி விளக்கம் கொண்ட சொற்பிறப்பு நெறிமுறைகளை (Principles of Etymology) தனி மடலமாக வெளியிடுதல்.

7. தமிழில் கலந்துள்ள வேற்றுமொழிச் சொற்கள் தாய் நூலான அகரவரிசையில் இடம்பெறாமல் அயற்சொல் மடலமான பத்தாம் மடலத்தில் தனியாக அகர வரிசைப் படுத்தப்படல்.

8. மொழியகழ்வாராய்ச்சி எனப் புகழப்படும் சொற்பிறப்பு வளர்ச்சி வரலாறு விளக்கும் இவ்வகரமுதலி, மாந்த நூலார், மன்பதை நூலார், தொன்முதுவரலாற்று நூலார், மொழி நூலார் உள்ளிட்ட பல்வேறு அறிவியல் ஆராய்ச்சியாளர்க்கு அரிய கருவி நூலாக அமையும். தமிழில் கலைச்சொற் படைப்பாளர்க்கு ஏற்ற துணை நூலாகும்.

9. உலகமொழிகளிடை ஊடாட்டம் பெற்றுள்ள தமிழ்ச் சொற்களை இனங்கண்டறிதற்கு எளிதில் உதவும் வகையில், ஆணிவேர்ச் சொற்களும் அடிப்படைச் சொற்களும் பெருந்தலைப்புச் சொற்களாக, தடித்த எழுத்தில் தரப்பட்டிருத்தல்.

10. முந்து திரவிடச் (Proto-Dravidian) சொற்களை வடிவ மீட்டமைக்கும்போது மேலைநாட்டாரைப்போல் ஒலியனியலை (phonology) அடிப்படையாகக் கொள்ளாமல் பொருட்

பாட்டை (semantics) நிலைக்களனாகக் கொள்வது, தமிழில் புதுக்கப்படும் படைப்புச் சொற்களுக்குச் செங் கூட்டல் (சிலுவை) குறியிட்டுக் காட்டுவதோடு படைத் தவர் பெயரும் குறிப்பிடப்படும். முந்து திரவிடச் சொற் களுக்கு உடுக்குறியிடப்படும்.

11. ஓரிலக்கம் சொற்களை மட்டும் கொண்டுள்ள சென்னைப் பல்கலைக்கழக அகரமுதலி வெளிவந்து அரை நூற்றாண் டாகியும் பல இலக்கம் சொற்களைச் சேர்த்து, தமிழில் சொல்வளத்தைப் பெருக்காத குறையைப்போக்க, முதன் முறையாக, கல்லாத மக்களிடை வழங்கும் வட்டார வழக்குகள், நாட்டுப்புறத் தொழிற்சொற்கள் ஆகிய வற்றை முறையாகத் தொகுத்தல், நூல்களிலிருந்து இதுவரை தொகுக்கப்படாத கூட்டுச் சொற்கள், மரபு வினைகள், இணை மொழிகள் ஆகியவற்றைச் சேர்த்தல், ஆங்காங்கே வண்ணப்பட விளக்கங்கள் சேர்க்கப்படுதல். பாவாணரின் சொற்பிறப்பியல் நெறிமுறைகளைப் பின் பற்றிப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் மறைந்துபோன தமிழ்ச் சொற்களையும், பிற மொழிகளில் திரிந்தும் திரியா மலும் வழங்கித் தமிழில் வழக்கற்றுப்போன சொற்களையும் வடிவமீட்டமைத்தல் ஆகிய பணிகள் மேற்கொள்ளப் பட்டுள்ளன. இம் முயற்சி, இவற்றை உலகின் பல்வேறு தொன்முதுமொழிகளின் எழுத்துச் சான்றுகளோடு ஒப் பிட்டு, அறப் பழங்காலத்தில் அவற்றுக்கும் தமிழுக்கு மிடையிலான கொள் கொடைகளை நிறுவத் துணை செய்யும்.

எ-டு:

| | | |
|---|---|---|
| (1) | ஆன்—அவ்விடம்<br>ஈன்—இவ்விடம்<br>ஊன்—முன்னிடம், நீ | பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் மறைந்துபோன தமிழ்ச் சொற்கள். |
| (2) | அம்முதல்—விற்றல்<br>கம்மவார்—உழவர்<br>(கமக்காரன்—உழவன், யாழ்ப்பாண வழக்கு) | தமிழில் வழக்கற்றுத் தெலுங்கில் வழங்கிவரும் பழந்தமிழ்ச் சொற்கள். |
| (3) | இயா (இஆ) = தந்தை<br>(இயவுள்—கடவுள், தலைவன், தந்தை, இயவு (இயா) – இயவுள்)<br>ஒ. நோ: நிலவு—நிலா. | பஞ்சாபி மொழியில் வழங்கிவரும் தமிழ்ச் சொற்கள் |

(4) இறைய = தந்தை } ஆத்திரேலிய பழங்குடிகளின் மொழியில்
புல(ம்) = கண் } வழங்கிவரும் தமிழ்ச் சொற்கள்.

12. ஆங்கிலம் 8 இலக்கம் சொற்களைக் கொண்டுள்ளது. தமிழுக்கு 4 இலக்கம் சொற்களையாவது இவ்வகர முதலி யில் சேர்ப்பதோடு, தமிழ் திரவிடத்திற்குத் தாய், ஆரி யத்திற்கு மூலம், ஞாலமுதற்றாய் மொழி என்னும் கருத்துக்கு அரணாக ஞாலத் தொன் மொழிகள் பலவற்றி லிருந்தும் தக்க சான்றுகளைத் திரட்டித் தருதல்.

சொற்களுக்குச் செந்தமிழ் வடிவம் காட்டுதலாலும், சொற் பிறப்பியல் கூறுதலாலும், தமிழுலகில் வழங்கும் இந்தச் சொல் இடம் பெறவில்லை என்று சுட்டிக்காட்ட முடியாத வகையில் அனைத்துச் சொற்களையும் முயன்று திரட்டித் தருதலாலும், பட விளக்கம் சேர்த்தலாலும், பொதுமக்கள் முதல் ஆராய்ச்சியாளர் வரை பயன்கொள நிற்றலாலும் இதற்குச் செந்தமிழ்ச் சொற்பிறப் பியல் பொதுப் பயன்பாட்டுப் படவிளக்க இருமொழிப் பேரகரமுதலி (Comprehensive general purpose bilingual illustrated Etymological Dictionary of the Tamil language) எனப் பெயரிடத் தகினும், பரோ எமனோவர் அகரமுதலி (D. E. D.,) தி. சொ. பி., (திரவிடச் சொற்பிறப்பியல் அகரமுதலி) எனக் குறிக்கப்படுவதுபோல், சுருக்கமாக செ. சொ. பி. (செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி) T. E. D., (Tamil Etymological Dictionary) என்றே இது பொதுவாக வழங்கப்படும்.

13. மறைந்த மொழிஞாயிறு பாவாணர், முதன்மடலத்தில் முதற்பகுதி மட்டும் எழுதி முடித்திருப்பினும், வேர்ச் சொல் கட்டுரைகளிலும், ஒப்பியன் மொழி நூல், முதல் தாய்மொழி, தமிழ் வரலாறு, சுட்டுவிளக்கம் போன்ற நூல்களிலும் பிற கட்டுரைகளிலும் அனைத்து மடலங் களுக்கும் தேவையான அடிப்படைச் செய்திகளனைத்தும் தந்திருப்பதால் அகரமுதலியின் அனைத்து மடலங்களும் முட்டின்றி வெளிவர வாய்ப்புள்ளது. "The Linguist has to tell the historians a lot" என்று உருசிய அறிஞர் கோந்தரதோவ் கூறிய பொன்மொழிக்கு இவ் வகரமுதலி தக்க எடுத்துக்காட்டாக விளங்கும் என்பது உறுதி.

14. உலக மொழிகளிலேயே தமிழ் ஒன்றுதான் பிறமொழிச் சொற்களை அறவே நீக்கி எழுதவும் பேசவும் வல்ல சொல்

வளம் பெற்றுள்ளது. இத்தகு உயர்தனிச் செம்மொழியின் தனித் தன்மையைக் காக்கவே இந்த அகரமுதலி உருவாகிறது.

15. ஆங்கிலம் உள்ளிட்ட மேலைநாட்டு மொழிகளிலுள்ள சொற்பிறப்பியல் அகரமுதலிகளில் சொன்மூலம் காட்டுவார்களேயன்றி அச் சொல் மூலத்திற்கும் மூலச் சொல் காட்டும் வழக்கமில்லை. kind, king என்னும் சொற்களுக்கு kin (family, related by blood) என்பது மூலமாகக் காட்டப்படுகிறது. ஆயின் kin எப்படிப் பிறந்தது, அதன் வேர்ச்சொல் என்ன என்பதை ஆராயும் முயற்சியில் மேனாட்டு வல்லுநர் இன்றுகாறும் இறங்கவில்லை. அம் மொழிகளும் அத்தகு ஆய்வுக்கு இடந்தரா. ஆயின், இத் துறையில் முயன்று முழுமையான வெற்றி பெற்றவர் பாவாணர் ஒருவரே. ஒளிர், ஒளி என்பவற்றுக்கு 'ஒள்' என்பதே வேர்ச் சொல் எனக் கூறும் பாவாணர் உல் (வெப்பம்)—உள்—ஒள் எனத் திரிந்ததாக வேர்ச் சொல்லுக்கும் வேர்ச்சொல் காட்டுகிறார். தமிழிலுள்ள ஆணி வேர்ச் சொற்களே உலகத் தொன் மொழிகளிலும் ஆணி வேர்ச் சொற்களாக இருக்கின்றன என்பது பாவாணரின் கொள்கை.

எ-டு: குல்—குலம் (குடும்பம்) குல்—குன்—*Goth.* Kun—*OS.* Kunni—*OE.* Cynn—*E.* Kin (family) இதிலிருந்து king, kind என்னும் சொற்கள் தோன்றியுள்ளன.

வேர்ச்சொல்லுக்கும் வேர்ச்சொல் கண்டுபிடித்து, எல்லாச் சொற்களுக்கும் அடிவேர்ச் சொற்களைக் (விதைச் சொல்—seed word, முளைச்சொல்—sprout word) கண்டு, ஆணி வேர்ச்சொல், பக்கவேர்ச்சொல், சல்லி வேர்ச்சொல் என வகைப்படுத்திய பாவாணரின் கொள்கைப்படி இந்த அகரமுதலி வெளிவருவது சொற்பிறப்பு ஆராய்ச்சியில் உலகிற்கே வழிகாட்டியாக அமையும்,

"அழகெலாம் ஒருங்கே கண்டால்
ஆர்கொலோ ஆற்றவல்லார்"

என வியக்கும்வண்ணம், மொழியாராய்ச்சித் திறனெல்லாம் ததும்பித் ததைந்து ஒருங்கே வெற்றிக் கனி தந்திருக்கிறது.

———

# என்மர் எண்மணி மாலை

[மருத்துவர் மறையரசன்]

(முன் இதழ் உ௬௦ ஆம் பக்கத் தொடர்ச்சி)

**8.1. வீரமாமுனிவர் :**

(வெண்பா)

காவலாய்த் தானுரோமக் கத்தோலிக் கம்வளர
ஆவலாய் வந்தேனென் ருண்டுதிருக்—காவலூர்
நற்கலம்ப கம்தந்தோய் தற்சமயம் நீங்காதோய்
பொற்சுடரே வாழி பொலிந்து.

**8.2. பரிதிமாற் கலைஞர் :**

(அகவல்)

பொலிந்து சிறந்த தீந்தமிழ் மொழியை
வலிந்து சிதைக்கும் வடமொழி யதனை
வழக்கிலா ஊமை மொழியென மொழிந்து
சழக்கரின் வாயைச் சார்த்திய கலைஞன்
பரிதி, மாலை விரட்டும்; இவனே
பரிதிமாற் கலைஞர் பெயருந் தரமே
என்றும் நிலவும் தமிழென
நின்றே எடுத்துரை பேச்சுந் தரமே!

**8.3. மறைமலையடிகள் :**

(கட்டளைக் கலித்துறை)

சுந்தரம் பிள்ளை வழுத்தும் மடற்பேறும் சொல்விவேகா
னந்தரை வென்றவர் நாயகர் பாற்கொளும் நன்றிசோம
சுந்தரக் காஞ்சி தருகிற பேறும் சுவையுமாக
வந்ததும் தீந்தமிழ் செய்தவப் பேறென வாழுதையா.

**8.4. பாவேந்தர் :**

(வஞ்சி விருத்தம்)

உதையால்அடி மிரட்டால்பிற வகையால்திருந் தாதோர்
கதையால்தமிழ்ப் பாட்டால்திருந் திடுவாரெனும் போது

விதையாயதை விதைத்தேயறி வூட்டும்பெரு மானே
புதையாதினும் எழுமேதமிழ் இனமேகரு மானே!

8.5. பாவாணர் :

(எண்சீர் ஆசிரிய விருத்தம்)

மானென்ருல் மாந்துமின்பப் பெண்டிரென்போம்; மற்ற
மண்ணென்ருல் களியென்போம் பாவாணன் உள்ளம்
தேனென்னும் தீந்தமிழில் மண்ணென்ருல் பொருந்தல்
திருமணமே பொருந்துதலாம் பொருந்தாது மணலாய்
வீணென்று எண்ணுமல் விரைந்தாய்ந்து சொல்லும்,
விருப்பமொடு அவன்விரும்பும் குறள்மொழியும் உரையும்
ஏனென்று கேட்காமல் ஏற்றிடுவோம் நம்மை
என்றென்றும் காத்துவரும் இனியதிருக் குறளே!

8.6. வ. சுப்பையா (பிள்ளை) :

(மருட்பா)

குறள்பரப்பும் கொள்கை குறிக்கோளாய்க் கொண்ட
மறவன்நீ வள்ளுவனே மாந்தி—திறமோடு
தேன்குறள் முவவின் தெளிவுரை பெற்று
மேன்முறை பதித்த மேன்மைக்
கோன்நினை தேத்தும் குவலயம் என்றும்.

8.7. பண்ணுய்வாளர் :

(சிந்து)

என்றே எண்ணுதே—இசைக்
கன்றே உன்னுலே
கலந்து கிடந்த இசையும் தமித்துச்
சுவைக்கும் பண்ணுலே—வரும்
அவைக்கு முன்னுலே

குன்றுப் பண்பாட்டோ—டென்றும்
ஒன்றுப் பண், பாட்டு
ஒலித்த தெலுங்கும் உலுத்துப்போகும்
ஓடும் தன்னுட்டுக்—கின்றேல்
மூடும் மண்போட்டு

நன்றுய்ச் செய்பவரே இசையை
நாடிப் பெய்பவரே
நலிந்த உடலும் யாழை எடுப்பின்
உள்ளம் கொய்பவரே—பிழைநெஞ்சப்
பள்ளம் செய், தவறே !

தென்றல் காற்றினிலே—இசைத்
தேனாய் ஊற்றினரே
திகைத்த உள்ளம் முகைக்குமென்றே
கூறி ஆற்றினரே—மனம்
தேற மாற்றினரே !

## 8.8. பாவல ரேறு :

(கலி வெண்பா)

மாற்றினனோ தன்கருத்தை மாட்டான் பிழைகொஞ்சம்
ஆற்றுவனோ அல்லன் அருந்தமிழை—ஏற்றும்;

மறந்தனனோ தன்னலத்தை மாத்தமிழின் காதல்
துறந்திடவும் ஒப்பான் பிறவும்—துறந்த

மறத்தமிழன் ஊற்றெடுத்த அன்புமனங் கொண்டு
புறப்பாட்டைப் பாடுகின்ற பெம்மான்—சிறப்பாக

தென்மொழியைத் தேன்மொழியைத் தீந்தமிழை ஏற்றுவதே
தன்னின் தலைப்பணியாய்க் கொண்டுவந்தோன்—எண்ணரிய

தென்மொழி ஞாயிறு தேவநேயன் பின்பற்றி
தென்மொழியைத் தந்துவருந் தோன்றலவன்—என்றும்

தமிழ்நிலத்தை ஆளத் தகுதிபெறு மென்றே
தமிழ்க்குருதி பாய்ச்சும் தமிழன்—உமிழ்கின்ற

வல்லடிமைச் சாகும் மொழியடிமை போமென்ற
சொல்லடியால் கூட்டும் சுவையுடையன்—மெல்ல

தமிழாரம் மேலோங்க தாழ்வகல நன்கு
அமிழ்சாற்றல் அன்பு சுரந்து—தமிழர்க்கு

வெல்லம் எனத்திகழ்வோம் விம்மும் புடைமார்பன்
நல்லழகைக் கூட்டும் நகை.

———

# ஆதீனங்கள் வளர்த்த அருந்தமிழ்

[புலவர் மு. சிவச்சந்திரன், எம். ஏ., பி. எட்.,

துணைப் பேராசிரியர்,

தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.]

(முன் இதழ் உசசஆம் பக்கத் தொடர்ச்சி)

இருபத்து நான்காவது குருமூர்த்திகள் காலத்தில் துவக்கப் பெற்ற 'ஞானசம்பந்தம்' என்னும் திங்கள்இதழ் பல்வேறு அறிஞர் களின் சிறந்த கட்டுரைகளைத் தாங்கி வெளிவந்துகொண்டிருக் கிறது. இப்பொழுது இருபத்தாருவது குருமூர்த்திகளாக எழுந்த ருளியிருக்கும் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் இன்னும் மிகச்சிறந்த அரிய நூல்களை வெளியிடும் திருவுளம் கொண்டு 'ஞானசம்பந்தம் பதிப்பகம்' என்னும் பதிப்பகம் ஒன்றையும் நிறுவித் தமிழ்நூல்கள் வெளியீட்டுப் பணியினை மேலும் விரிவுபடுத்தி யருளியுள்ளார்கள். பாடல்பெற்ற தலங்கள் பலவற்றிற்கும் நேரில் சென்று பார்த்து அத் தலத்தின் சிறப்புகளையும் அத் தலத்திற்குச் செல்லும் வழிகளையும் அத் தல புராணங்களையும் அத் தலத்திருப்பதி கங்களையும் அவற்றின் குறிப்புரையையும் சேர்த்து, தனித்தனி நூல் களாக மிகக்குறைந்த விலையில் குருமூர்த்திகள் தாம் பிறந்த நாள் வெளியீடுகளாக வெளியிடச் செய்து வருகின்றார்கள்.

தருமை ஆதீனம் இருபத்தைந்தாவது குருமூர்த்திகள் 1946 இல் சென்னைப்பல்கலைக் கழகத்தின் அங்கீகாரத்துடன் ஒரு பல்கலைக் கல்லூரியைத் தோற்றுவித்தருளியுள்ளார்கள். தமிழ் வித்துவான் வகுப்புகளும், வடமொழி சிரோன்மணி வகுப்புகளும் இசை வகுப்பு களும் இக் கல்லூரியில் நடைபெற்று வந்தன. இதுநாள் வரை ஏறத் தாழ ஆயிரம் தமிழ்ப்புலவர்களை உருவாக்கிச் செந்தமிழ்ப்பணி ஆற்றத் தமிழகத்திற்கு இக்கல்லூரி வழங்கியுள்ளது. இப்பொழுது பட்டத்திலிருக்கும் 26ஆவது குருமூர்த்திகளும் தவத்திரு குன்றக் குடிஅடிகளார் அவர்களும் இப்பொழுது காசிமடத்துத் தலைவராக உள்ளவர்களும் இக்கல்லூரியில் பயின்றவர்கள் என்பது குறிப்பிடத் தகுந்தது. இவர்கள் காலத்தில் தொடங்கப்பெற்ற திருமுறைகள் உரை வெளியீட்டுப் பணியும் திருக்குறள் உரைவள வெளியீட்டுப் பணியும் குறித்துப் போற்றத்தக்கவை. இருபத்தாருவது குரு மூர்த்திகள் சைவசித்தாந்தம் உலகம் முழுமையும் பரவும் வகையில் ஒரு மையம் துவங்கும் கருத்தைத் திருவுளம் கொண்டருளி வருகின் றார்கள். இது காலத்தில் செய்யும் பணியாகும். இதற்குச் சைவப் பெருமக்கள் அக் குருமூர்த்திகளுக்குப் பெரிதும் கடமைப்பட்டுள் ளார்கள் என்பதுண்மை.

இவ்வாதீனத்தில் மிகச்சிறந்த பல்வேறு மொழிநூல்களை உடைய ஆதீன நூலகம் ஒன்றும் உள்ளது. சென்னையில் பிரசார நிலையம் வைத்துச் சைவமும் தமிழும் தழைத்தினிதோங்கச் செய்து வருவதும் ஒவ்வோர் ஆண்டும் ஆவணிமூல நன்னாளில் பல்துறை அறிஞர்களைப் பாராட்டிப் பட்டம் கொடுப்பதை வழக்கமாகக் கொண்டு செய்துவருவதும் குறிக்கத்தக்கன. தமிழறிஞர்கள் சில ருக்கு ஆதீனப்புலவர்கள் என்னும் பட்டமளித்து அவர்களின் பணி சிறக்க ஊக்கம் ஊட்டிவருகிறது தருமை ஆதீனம். மேலும் ஆண்டு தோறும் குருமுதல்வரின் குருபூசைத் திருநாளை ஒட்டிப் பத்து நாள்கள் திருநெறிய தெய்வத் தமிழ் மாநாடும் சமயப் பயிற்சி வகுப்பும் தொடர்ந்து இவ்வாதீனம் நடத்தி வருகிறது.

ஆதீனத் தமிழ்ப்பணிகளை அவ்வப்பொழுது தமிழ்ப்பத்திரிகை களில் அறிஞர்கள் பாராட்டியுள்ளமை ஆதீனத் தமிழ்ப்பணிக்குச் சிறந்த எடுத்துக்காட்டுகளாகும். திருக்குறள் உரைவளம் வெளி வந்ததைப் பாராட்டிப் பல இதழ்கள் கருத்து வழங்கின. கல்கி இதழ்,

''மடாலயங்கள் எவ்வளவு தொண்டுபுரிந்து வந்திருக்கின்றன என்பதற்கு ஓர் அருமையான அத்தாட்சி இப்பொழுது நமக்குக் கிடைத்திருக்கிறது''

என்று பாராட்டுக் கூறியது. தமிழறிஞர் திரு. ரா. பி. சேதுப் பிள்ளை அவர்கள் வரலாற்றுக் கண்ணோட்டத்துடன் பாராட்டுவதைப் பாருங்கள் :

''சற்றேறக் குறைய பதினைந்தாம் நூற்றாண்டின் பிற்பகுதி யிலிருந்து தென்னாட்டுச் சைவமடங்களே மொழியையும் சமயத்தை யும் பாதுகாக்கும் அறநிலையங்களாக விளங்குகின்றன'' என்பன அவரின் பாராட்டு மொழிகள்.

தருமை ஆதீனம் செய்த தமிழ்ப்பணியை விரித்துக் கூறினால் காலத்தில் அடக்க முடியாது. ஆதலின் இத்துடன் நிறுத்தி, இவ் வாதீனத்தின் சிடர் மடமாகிய ஸ்ரீகாசிமடம் ஆற்றியுள்ள அருந் தமிழ்ப் பணிகளைச் சிறிது காண்போம்.

ஸ்ரீகாசிமடம் :

காசியில் 'ஸ்ரீகுமாரசாமி மடம்' நிறுவிய குமரகுருபர சுவாமிகள் பிரபந்தங்கள் பலவற்றை அருளிச் செய்தவராவர். ஸ்ரீசெந்திலாண் டவன் திருவருள் பெற்றுக் குமரகுருபர அடிகள் அருளிச் செய்த கந்தர் கலிவெண்பா, கைலைக்கலம்பகம், மதுரைக்கலம்பகம், மீனாட்சி யம்மை பிள்ளைத்தமிழ், மீனாட்சியம்மை குறம், மீனாட்சியம்மை இரட்டைமணிமாலை, நீதிநெறிவிளக்கம், திருவாரூர் நான்மணி மாலை, பண்டார மும்மணிக் கோவை, முத்துக் குமாரசுவாமி பிள்ளைத்

தமிழ், சிதம்பரச் செய்யுட்கோவை, சிதம்பர மும்மணிக்கோவை, சிவகாமியம்மை இரட்டைமணிமாலை, சகலகலாவல்லி மாலை, காசிக் கலம்பகம், காசித்துண்டி விநாயகர் பதிகம் என்னும் பதினறு நூல் களும் மிகச்சிறந்த தமிழ்நூல்களாகும். குமரகுருபர சுவாமிகள் செந்தமிழ்ப்பற்றும் சிவநெறிப்பற்றும் ஒருங்கு வாய்ந்தவர் என்பது அவர் அருளிச் செய்த நூல்களைக் கொண்டுணரலாம். தாம் பாடிய மீனுட்சியம்மை பிள்ளைத்தமிழில் வேறு எந்த பிள்ளைத்தமிழிலும் இல்லாத அளவிற்கு முப்பது இடங்களுக்கு மேல் 'தமிழ்' என்னும் சொல்லைப் பாராட்டு முகத்தான் கையாண்டுள்ளார். முத்தமிழ், மும்மைத்தமிழ், பசுந்தமிழ், தெளிதமிழ், தெய்வத்தமிழ், முதுதமிழ், நறைபழுத்த துறைத் தீந்தமிழ் போன்ற இடங்கள் இதற்குச் சான்று பகர்வனவாம்.

காசியில் உள்ள ஸ்ரீ குமாரசாமி மடத்தின் தலைவர்களாக விளங் கியவர்களில் ஆருவது பட்டத்திலிருந்த ஸ்ரீலஸ்ரீ காசிவாசி தில்லை நாயகசுவாமிகள் கி. பி. 1720இல் திருப்பனந்தாளில் ஸ்ரீகாசி மடத்தின் கிளைமடம் ஒன்றைக் குருநாதரின் அருளாசியுடன் தோற்று வித்தார்கள். 19ஆவது பட்டத்தில் எழுந்தருளியிருந்த ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிநாத சுவாமிகள் தம் ஆட்சிக்காலத்தில் டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் அவர்களைக் கொண்டு பல தமிழ் நூல்களைப் பதிப்பித்து வெளியிடச் செய்துள்ளார்கள். டாக்டர் உ வே. சா. அவர்கள் தாம் எழுதிய 'நல்லுரைக் கோவை' இரண்டாம் பாகத்தில் 'தமிழ் வளர்ச்சி' என்னும் தலைப்பில் திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம் தமிழை வளர்க்கச் செய்துவரும் பணியினைக் குறிப்பிட்டு எழுதியுள் ளார்கள். 'திருவாவடுதுறை, தருமபுரம், திருப்பனந்தாள் முதலிய இடங்களில் உள்ள மடங்களும் சேது சமஸ்தானம் முதலான சமஸ் தானங்களும் தமிழ் வித்துவான்களை ஆதரித்துத் தமிழ் வளர்ச்சிக் குரிய காரியங்களைச் செய்து வந்திருக்கின்றன' என்று எழுதி மேலும், 'இப்போது திருப்பனந்தாள் காசிமடத்தில் தலைவராக உள்ளவர்கள் தமிழ் அறிவு வளர்ச்சியைக் கருதி நிலையான தருமங் களைச் செய்துவருதல் யாவரும் பாராட்டுதற்குரியது' என்று குறிப் பிட்டுள்ளார்கள். மேலும் டாக்டர் உ. வே. சா. அவர்கள் தம் பதிப்பாகிய குமரகுருபர சுவாமிகள் பிரபந்தங்கள் என்னும் நூலில் ஸ்ரீகாசிமடத்தின் 19ஆவது பட்டத்தில் எழுந்தருளியிருந்த ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிநாத சுவாமிகள் தமிழ் வித்துவான் வகுப்பில் மாநிலத்தில் முதல்வராகத் தேர்ச்சி பெறுபவருக்குப் பரிசாக ரூ. 1000 தொகை வழங்க ஒரு நிலையான வைப்புத்தொகை ஏற்ப டுத்தியமையைப் பாராட்டிக் கீழ் வருமாறு எழுதியுள்ளார்கள்.

(தொடரும்)

---

# பேசா அனுபூதி பிறந்தது

[க. சி. கமலையா]

**செவிச் செல்வம் :**

திருவாசகத்தில் ஒரு பாடல் :

"வான நாடரும் அறியொ ணாதநீ
மறையி லீறுமுன் தொடரொ ணாதநீ
ஏனை நாடரும் தெரியொ ணாதநீ
என்னை இன்னிதாய் ஆண்டு கொண்டவா
ஊனை நாடகம் ஆடு வித்தவா
உருகி நானுனைப் பருக வைத்தவா
ஞான நாடகம் ஆடு வித்தவா,
நைய வையகத் துடைய விச்சையே"

உள்ளத்தை உருகச் செய்வது எளிதன்று. அதே போன்று ஊனை ஆடச்செய்வதும் அருமை. அறிவின் இயக்கம்தானே உள்ளம்! எல்லாம் வல்ல இறைவன் நம்முடைய ஊனையும் ஆட்டு விக்க வல்லவன். வல்லவன் பம்பரம் மணலிலும் ஆடும். கோள்கள் பலவற்றையும் பம்பரமாய் ஆட்டி வைப்பவன் இறைவன். அசைவி லன்றோ கோள்கள் இயங்குகின்றன! எனவே ஊனை ஆடச்செய்வது அவனுக்கொரு பொருட்டன்று. ஊன் ஆட நாம் காண்பதென்பது எப்பொழுதும் நடக்கும் நிகழ்ச்சியன்று. இறைவன் பேராற்றலையும் பெருங்கருணையையும் நினைந்து உள்ளம் உவக்கும் பொழுது ஊன் ஆடுகிறது.

"செல்வத்துட் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்
செல்வத்து ளெல்லாம் தலை"

செவி வழியாக மக்கள் பெறும் இன்பமே எல்லா இன்பங்களி லும் சிறந்தது. செவிச் செல்வம் ஒன்றே எப்பொழுதும் நம்மை விட்டு நீங்காதிருக்கக் கூடியது. அதன் மூலம் பெறும் பயன் வாழ்க் கைப் பாதையில் நமக்கு வழிகாட்டியாய் அமையக் கூடியது. பிற செல்வங்கள் நாடகக் கொட்டகையில் மக்கள் கூடுவதும் கலைவதும் போல. திருவள்ளுவர் இதை வெகு நன்றாக எடுத்துக் கூறியுள்ளார்.

"கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கும் அதுவிளிந் தற்று."

சிற்றூர்களில் தெருக்கூத்து நடக்கும். கூத்து தொடங்கு முன்னர் மக்கள் ஒன்றிரண்டு என்று சிறுகச் சிறுகக் கூடுவர்.

சிறிது நேரத்துக்கெல்லாம் தெருவே நிரம்பி வழியும். கூத்து தொடங்கும். நள்ளிரவுக்குப் பிறகும் நடக்கும். ஒருவாறு கூத்து முடியும். கூட்டம் கலையும் பொழுது மக்கள் திரள் திரளாகக் கலைவர். சில மணிக்கூறுகளில் தெருவில் தேடிப்பிடித்தாலும் மருந்துக்குக்கூட ஓர் ஆள் அகப்படமாட்டான். பெருஞ்செல்வமும் அதுபோல வெள்ளம் வெளியேறும்பொழுது ஏரிகளில் மதகுகளை முழுவதும் திறந்துவிட்டால் எப்படித் தண்ணீர் விரைந்து செல்லுமோ அப்படி நீங்கிவிடும்.

**வடமொழிப் பாடலும் தென்மொழித் தென்றலும் :**

அருணகிரிநாதருடைய திருப்புகழ் போன்ற பக்திப் பாடல்கள் இறைவனுடைய திருவடித்தாமரைகளை நமக்குத் தேடித்தரும் செவி வழியாக வரும் செல்வம். திருப்புகழின் இன்பத்தை நுகரும் மக்கள் மெய்ம்மறந்து பரவசமாகின்றனர்.

*''திருப்புகழ் படிக்குமவர் சிந்தைவலு வாலே*
*ஒருத்தரை மதிப்பதிலை உன்றனரு ளாலே''*

என்று பாடுவார் அருணகிரிநாதர். ஒருத்தரை மதிப்பதில்லையென்றால் திருப்புகழ் படித்துப் பெற்ற மன உரத்தைக் கொண்டு எவரையும் அவமதிப்பது என்று பொருளல்ல. முருகன் ஒருவனே முழுமுதற் கடவுள். இறைவன் ஒருவன் மட்டுமே உயிர்களால் மதிக்கத் தக்கவன். மற்றைய ஒருத்தர் எப்படி இறைவனுக்கொப்ப மதிப்பிற் குரியவராக முடியும் என்பதுதான் பொருள்.

ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கும் கருணை படைத்தவன் இறைவன். அவனுடைய புகழை எடுத்தோதும் பாடல்களும் தெய்வத் தன்மை பொருந்தியவை. மக்கள் உய்யவும் பிறவி எடுத்த பேற்றைப் பெறவும் அருணகிரிநாதருடைய திருப்புகழ், கந்தரலங்காரம், கந்தரனுபூதி, திருவகுப்பு, வேல்மயில் விருத்தம் ஆகியவை வழிவகுத்துக் கொடுக்கின்றன.

**மெய்யாக ஓர்சொல் :**

தாயுமானவர் மனத்தெளிவு நிறைந்த பெரியார்; வடமொழிப் புலமை நிரம்பியவர்; தென்மொழியைத் தெளிந்து கற்றுத் தேர்ந்தவர். தாயுமானவரின் உவமைச் சிறப்பும் கருத்துச் செறிவும் அருவமாய் நிற்கும் அரிய பரம்பொருளைக் கற்றோரும் மற்றோரும் புரிந்து பரவசப்படும்படி பாடும் ஆற்றல் படைத்தவர். அருணகிரிநாதரை அவர் போற்றிப் புகழ்ந்திருப்பதிலிருந்து திருவண்ணாமலை முருகன் அடியாரிடத்து அவர் வைத்திருந்த சிறந்த மதிப்பை நாம் தெரிந்து கொள்ள முடிகிறது.

"ஐயா அருணகிரி அப்பா உனைப்போல
மெய்யாக ஓர் சொல் விளம்பினர் யார்?"

என்றும்

"அறிவை யறிவதுவே யாகும் பொருளென்று
உறுதி சொன்ன உண்மையினை யோருநாள் எந்நாளோ"

என்றும்,

"கந்தரனு பூதிபெற்றுக் கந்தரனு பூதிசொன்ன
எந்தையருள் நாடி யிருக்கும்நாள் எந்நாளோ"

என்றும் போற்றிப் பரவுகிறரென்ருல் அருணகிரிநாதருடையவும் அவர் திருவாய் மலர்ந்தருளிய பாடல்களைப்பற்றியும் நம்மனோர் என்ன சொல்ல முடியும்?

திருப்புகழ் முருகனுடைய திருவடித்தாமரைகளைத் தேடித்தரக் கூடிய வலிமை படைத்தது. அருணகிரிநாதருக்கு வடமொழிச் சொல்லாட்சியில் மிகுந்த விருப்பமிருந்தது என்பதை அவர் பாடல் களிலிருந்து தெரிந்துகொள்ளலாம். அத்தகைய பாடல்களுள் ஒன்று பின் வருமாறு :

"நாத விந்துக லாதீ நமோநம
வேத மந்த்ரசொ ரூபா நமோநம
ஞான பண்டித சாமீ நமோநம—வெகுகோடி

நாம சம்புகு மாரா நமோநம
போக அந்தரி பாலா நமோநம
நாக பந்தம யூரா நமோநம—பரசூரர்

சேத தண்டவி நோதா நமோநம
கீத கிண்கிணி பாதா நமோநம
தீர சம்ப்ரம வீரா நமோநம—கிரிராஜ

தீப மங்கள சோதீ நமோநம
தூய அம்பல லீலா நமோநம
தேவ குஞ்சரி பாகா நமோநம—அருள்தாராய்"

செஞ்சொல் தமிழில் முருகனை அவர் போற்றுவதையும் நாம் காண்கின்ரேம்.

"இசைந்த ஏறும் கரியுரி போர்வையும்—எழில்நீறும்
இலங்கு நூலும் புலியத ளாடையும்—மழுமானும்
அசைந்த தோடும் சிரமணி மாலையும்—முடிமீதே
அணிந்தஈசன் பரிவுட ன் மேவிய குருநாத"."

ஓர் இனிய தமிழ்ப்பாடல்; மந்தமாருதம் வீசுவது போன்றிருக்கின்றது.

**ஒரு வழிகாட்டி :**

சொல்லுக்குச் சொல் தித்திக்கும் அருணகிரிநாதரின் பாடல்களில் கந்தரனுபூதியை அவற்றின் சாறு என்று கொள்ளலாம். கந்தரனுபூதிப் பாடல்களைப் படித்துப் புரிந்துகொள்வதற்கு அருணகிரிநாதரின் பிறபாடல்கள் பெரிதும் துணைபுரியும். முருகன் திருவடித் தாமரைகளைத் தேடிச்செல்லும் பயணத்திற்குக் கந்தரனுபூதி ஒரு வழிகாட்டியாயமையும். கந்தரனுபூதி என்ற பற்றுக்கோடு பிறவி என்ற கடலைக் கடக்கும் புணையாயமையும். கந்தரனுபூதி என்ற சொற்றொடருக்குக் 'கந்தர் அனுபவம்', 'முருகப் பெருமான் அனுபவம்' என்று பொருள் கொள்ளலாம். அதுவே நூலுக்கும் பெயராய் அமைந்தது. எவ்விதப் பற்றுக்கோடுமின்றித் தானே நிற்கும் பரம் பொருளைப் பண்டைத்தமிழர் கந்தழி என்று குறிப்பிட்டனர். கந்தழி என்ற அச்சொல் கந்தன் என மருவி வழங்கிற்று என்று கூர்த்த மதியுடையார் சிலர் கூறுவர். சரவணப் பொய்கையில் ஆறுருவங்கள் ஒருருவமாய்ச் சேர்க்கப்பட்டதால் கந்தன் என்றாயிற்று; இது வடமொழிச் சொல்லின் திரிபு என்பது பெரும்பாலோர் முடிபு. இறைவனை எப்படிச் சொல்லி அழைத்தால் என்ன? இதுபற்றிப் பெரிய சர்ச்சையோ வாதமோ வேண்டியதில்லை. மலரை எப்பெயர் சொல்லி அழைத்தாலும் மணக்கும்.

**பேசா அனுபூதி பிறந்தது :**

கந்தரனுபூதி பாராயணநூல். காப்புச் செய்யுளை நீக்கி மொத்தம் ஐம்பது பாடல்கள் உள்ளன. இடைச்செருகல்கள் புகுந்து சில புத்தகங்களில் நூறு பாடல்கள் காணப்படுகின்றன. திருத்தணிகையுலாவில் 'அனுபூதி ஐம்பதுமே' என்று ஐயப்பாடின்றிக் கூறப்பட்டிருப்பதால் கூடுதல் ஐம்பது பாடல்களும் இடைச்செருகல் என்பதுபற்றி ஐயப்பாடின்று. 'நெஞ்சக் கனகல்' என்று தொடங்கும் பாடலும் இடைச்செருகல் என்று கூறப்படுகிறது. விநாயகருக்கென்று காப்புச் செய்யுள் தனியாக இல்லாமல் அவருடைய திருப்பெயரைக் குறிப்பிட்டுக் காப்புச் செய்யுளை அருணகிரிநாதர் பாடினார். அதுவே 'ஆடும் பரிவேல் அணிசேவல்' என்று தொடங்கும் பாடல். சில புத்தகங்களில் கந்தரனுபூதிப் பாடல்களுக்குத் தலைப்புகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அவற்றில் ஒன்று 'மாதரைத் தழுவ' என்ற தலைப்பைக் கொண்டுள்ளது. கனிந்த உள்ளம் கொண்ட—பக்குவ நிலைபெற்ற—மாதரின்பத்தை அழுத்தந் திருத்தமாய் உதறியெறிந்து

இறைவன் கழல்களைப் பற்றிக்கொண்டு பல பாடல்களைப் பாடிய அருணகிரிநாதர் இத்தலைப்பை எவ்வாறு எண்ணியிருக்கக்கூடும்?

''கவிதையை இருவகைகளாகப் பிரிக்கலாம். ஒன்று சமயச் சார்புள்ளது; மற்றொன்று அதற்குப் புறம்பானது. சமயச் சார்புள்ள பாடல்களில் கருத்துக்கே முதலிடம். கருத்துலகங்களை அவை படைத்து மக்களைச் சிந்திக்கத் தூண்டும். கருத்து வளமாயிருந்தாலும் அவை சிறந்து விளங்குவதில்லை'' என்று கூறப்படுகிறது.

தமிழ்ப் பக்தி இலக்கியத்துக்கு அது பொருந்தாது.

'தத்துவம் எங்குண்டு தத்துவன் அங்குண்டு' என்பது திருமூலரின் பொன்மொழி. அருணகிரிநாதர் தாம் நினைந்து வழிபட்ட முருகன் என்ற தத்துவத்தைக் கந்தரனுபூதியில் வடித்துக் காண்பித்துள்ளார். எந்தச் சூழ்நிலையில் அனுபூதி பிறந்தது என்பதை அருணகிரிநாதரே ஒரு பாடலில் உரைக்கின்றார் :

''தூசா மணியும் துகிலும் புனைவாள்
நேசா முருகா நினதன் பருளால்
ஆசா நிகளம் துகளா கியபின்
பேசா அனுபூ திபிறந் ததுவே''

''தூய்மையான மாணிக்கங்களாலாகிய மாலையையும் அழகிய ஆடையையும் அணியும் வள்ளிநாச்சியாருடைய காதலனே! மாறா இளமையும் நீங்கா மணமும் குன்றா அழகும் உடையவனே! உனதன்பாலும் அதன் பின் தோன்றிய அருளாலும் ஆசையென்ற விலங்கு தவிடுபொடியானதுமே பேசா மௌனநிலை என்னுள் தோன்றிற்று'' என்று பொருளுரைக்கலாம்.

———

## நேர்மையற்றவனைப் போற்றும் காலம்!

லஞ்சம் வாங்கியாவது பிறர் கேட்பதைச் செய்து முடிக்கின்றவன் இன்று அலுவலகங்களில் திறமை உடையவனாகப் போற்றப்படுகிறான். லஞ்சம் வாங்காமல் நடுநிலைமையாகக் கடமையைச் செய்கின்றவனைக் குறித்துப் பலரும் புறக்கணித்துப் பேசும் காலம் இது. உதவாக்கரை என்று அவன் பழிக்கப்படுகின்றான். ''நான் இவ்வளவு பணம் கொடுத்தேன். உடனே அவர் அந்தக் காரியத்தை முடித்துக் கொடுத்தார். அவர் இல்லையானால் அது முடித்திருக்காது. அவரைத்தான் தெய்வமாகப் போற்றவேண்டும்'' என்று லஞ்சம் கொடுத்தவர்கள் நேர்மையற்றவனைப் போற்றும் காலம் இது.

டாக்டர் மு. வரதராசனார்.
மண்ணின் மதிப்பு, பக். 97.

# குறிஞ்சிப்பாட்டில் வரும் செடிகொடி மரப்பெயர்கள்

[பி. எல். சாமி, இ. ஆ. ப. (ஓய்வு)]

பத்துப்பாட்டில் ஒன்றுன குறிஞ்சிப்பாட்டில் பல செடிகொடி மரப்பெயர்கள் வருகின்றன. அவற்றைப் படிக்கும்போது இஃது ஒரு செடிப்பெயர் அகராதியோ என்றுஎண்ணத் தோன்றும். கபிலர் பாடிய குறிஞ்சிப்பாட்டில் 99 செடிகொடி மரங்கள் இருப்பதாகக் கணக்கு எடுக்கப்படுகின்றது. இவற்றில் ஒரு சிலவற்றை அறிவியலடிப் படையில் அறிந்து கண்டுகொள்ள முடியாவிட்டாலும் பலவற்றை அறிந்துகொள்ளலாம். இவற்றை நன்கு அறிந்துகொள்ள உரை களும் நிகண்டுகளும் நாட்டுப்புற மக்கள் வழக்குகளும் கேரளத்தில் வழங்கும் பெயர்களும் உதவுகின்றன.

குறிஞ்சிப்பாட்டின் 61 ஆவது வரியிலிருந்து இந்தச் செடிகொடி மரங்கள் கூறப்பட்டுள்ளன. முதன்முதற் கூறப்பட்ட செடி செங் காந்தள் ஆகும். (நற்றிணை 34, 294, 379, கலி : 52) வெண் காந்தளைக் கோடல் (அகம் 264) என்றழைத்தனர். இதை Gloriosa superba என்று அறிவியலில் அழைப்பர். செங்காந்தளைப் போன்ற அழகுடைய பூக்கள் தமிழ்நாட்டில் மிகச் சிலவே யுள்ளன. ஆதலின் செங்காந்தளை முதலில் வைத்துப் பாடியது பொருத்தமே அடுத்து வருவது ஆம்பலாகும். இதை வெள்ளை அல்லி என்று கூறுவர். இதை அறிவியலில் Nymphaea lotus என்றழைப்பர்.

அனிச்சம் அடுத்துக் கூறப்பட்டுள்ளது. முற்கால நூல்களில் திருக்குறளில் மட்டுமே 90, (1105, 1120) கூறப்பட்டுள்ளது. இதைப்பற்றிச் சங்கநூல்களில் எங்கும் யாதொரு குறிப்பும் இல்லை. திருக்குறளில் ஒரு பாடல் ''மோப்பக் குழையும் அனிச்சம்'' என்று கூறியுள்ளது. அனிச்சத்திற்கு விளக்கமில்லாததினுல் இதை எது வென்று அறுதியிட்டுக் கூறமுடியவில்லை. ஆனுல் பாளையங் கோட்டை சித்த மருத்துவக் கல்லூரியில் ஆராய்ச்சி ஆசிரியராகப் பணிபுரிந்த குமாரசாமி அவர்கள் அனிச்சத்தை Anagallis Aravensis என்று கூறியுள்ளார். மோப்பக் குழையும் அனிச்சம் என்பதற்குக் காற்றில் உள்ள ஈரப்பதனை (Moisture) முகப்பக் குவியும் அனிச்சம் என்று பொருள் கூறியுள்ளார். இந்த விளக்கம் உரை யாசிரியர் கூறுவதிலிருந்து வேருக இருப்பினும் ஏற்கத் தக்கதே.

குவளை கூறப்பட்டுள்ளது. இதைச் செங்கழுநீர் என்று சொல்வர். வடமொழியில் Kubalaya என்றழைப்பர். இச் சொல் தமிழில் இருந்து அமைத்துக்கொண்டது என்று கூறுவர். இந்த நீர்ச்செடியில் மிகவும் சிவந்த பூக்கள் உண்டு. பெரும்பாணாற்றுப் படையில் இதன் பூவிதழ்களைச் சிவந்த அரக்கிற்கு ஒப்பிட்டுள்ளனர். பல்லவர் காலத்தில் குவளைக்காணம் என்று இந்தச் செடியை வளர்ப் பதற்கு வரி விதித்திருந்தனர். இதன் பூ பெரிதாகவும் இதழ்கள் இரட்டை வரியுடையனவாகவும் இருக்கும். இந்தப் பூவைக் கடவுள் வழிபாட்டில் பயன்படுத்தினர் என்பது தெரிகின்றது. அறிவியலில் இந்தச் செடியை Nymphaea Rubra என்றழைத்தனர்.

அடுத்து வருவது குறிஞ்சிச் செடியாகும். இதன் பெயராலேயே குறிஞ்சிப்பாட்டு பாடப்பட்டுள்ளது. இந்தக் குறிஞ்சிச் செடி 12 ஆண்டுகளுக்கு ஒருமுறை பூக்கும். குறிஞ்சிச் செடியையும் அதன் நறுந்தேனையும் பல சங்கப் பாடல்கள் (நற்றிணை 176, 268, 301. அகம் : 308, குறுந்தொகை : 3, புறம் : 374, மதுரைக்காஞ்சி வரி : 301) கூறியுள்ளன. இதனுள் சில வகை நான்காண்டு களிலும் பூக்கும். நீலக்குறிஞ்சி மலைச்சாரலில் பூக்கும்போது சாரல் முழுவதும் நீலப்படலம் படிந்தாற்போல் இருக்கும். இது பன்னிரண்டு ஆண்டுகட்கு ஒருமுறை பூக்கும். சங்க நூல்களுள் கூறப்பட்டுள்ள குறிஞ்சி Strobilanthus Kunthianus ஆகும்.

வெட்சி என்ற செடி சிவப்புப் பூக்களை உடையது. மலையாளத்தில் இதன் வகையான ஒரு செடியைத் தெச்சி என்றழைப்பர். இதன் பூவைப் பூசைகளில் பயன்படுத்தி, பிரசாதமாகக் கேரளாவில் அளிப் பர் வெட்சியை அறிவியலில் Ixora Coccinia என்று அழைப்பர்.

செங்கோடுவேரி ஆயுர்வேத மருந்துகளில் பயன்படுத்தப்படு கின்றது. சித்திர மூலம் என்று அழைப்பர். இதை ஆங்கிலத்தில் Rose coloured leadwort என்றழைப்பர். அறிவியலில் Plumbago Rosea என்றழைப்பர். தேமா ஒரு மாமர வகையாகும். இதன் பழம் சுவையுடையதாக இருக்கும். இது வளர்க்கப்படும் மாமரமாக இருக்கவேண்டும். மாமரத்தை Mangifera Indica என்றழைப்பர். இபபெயரில் தமிழ்ப் பெயர் உள்ளது.

மணிச்சிகை என்ற செடி கூறப்பட்டுள்ளது. உரையாசிரியர் செம்மணிப் பூ என்று பொருள் கூறியுள்ளார். மணிச்சிகை என்ற வழக்கு ஈழ நாட்டில் வழங்குவதால் இதை எதுவென்று அறிய முடியும். இது சமதரைகளிலும் சிறு குன்றுகளிலும் ஆற்றோரங் களிலும் காணப்படும். இதன் பூ மணியைப் போல இருக்கும். சிவந்த

நிறமுடையது. அறிவியலில் இதை Ipomea Sepiara என்றழைப்பர்.

அதற்கடுத்துச் சொல்லப்பட்ட செடி உந்தூழ் என்பதாகும். இதற்குப் பெரிய மூங்கில் என்று பொருள் கூறப்பட்டுள்ளது. உந்தூழ் என்ற பெயர் தவருக முந்தூழ் என்ற பெயருக்கு இணையாக வழங்கப்பட்டதாகும். முந்தூழ் என்ற பெயரே சங்க நூல்களிலும் நிகண்டுகளிலும் வழங்குகின்றது. அகநானூற்றிலும் (78) குறுந்தொகையிலும் (239) மலைபடுகடாத்திலும் (வரி 133) முந்தூழ் என்றே வழங்குகின்றது. உ. வே. சாமிநாதய்யர் 'தேமா' என்பது முதல் பெருமூங்கிற் பூ என்பதிறுதியாக உள்ளவை தருமபுர வாதீன மடத்திலிருந்து கிடைத்த ஒரு பழைய ஏட்டுப் புத்தகத்தில் மட்டும் இருந்தன என்று கூறியுள்ளார். ஆதலின் பெருமூங்கிற் பூ என்று பொருள் கூறப்படும் உந்தூழ் உண்மையான பாடமன்று. முந்தூழ் என்றிருந்திருக்க வேண்டும் ஒரே ஏட்டுப் புத்தகத்தில் கிடைத்த இந்த வரி இடைச் செருகலாகவும் இருக்கலாம். முந்தூழ் என்று கொள்வோமென்ருல் முந்தூழ் என்ற பெயர் முந்தி ஊழ்த்தது என்ற பொருளுடையதாக இருக்கலாம். ஏனென்ருல் பெருமூங்கிற் பூ முப்பது ஆண்டுகளுக்கு ஒருமுறை பூக்கின்றது. அறிவியலில் இதை Bombusa Arundinaceae என்றழைப்பர்.

கூவிளம் இப்பொழுது வழங்கும் வில்வ மரமாகும். இதை மலையாளம் கன்னட மொழிகளில் கூவிளம் என்றே அழைக்கின்றனர். இதை அறிவியலில் Aegle Marmelos என்றழைப்பர்.

எறுழம் என்ருெரு செடி கூறப்பட்டுள்ளது. இதன் பூ நெருப்பு போன்று சிவந்து இருக்கும் என்று கூறப்பட்டுள்ளது. இதைப் பற்றிச் சங்க நூல்களிலேயோ பிற்கால நூல்களிலேயோ யாதொரு குறிப்புமில்லை. ஆதலின் இந்தச் செடி அறிவியற்படி எதுவென்று கூறமுடியவில்லை.

சுள்ளி என்பதற்கு மராமரம் என்று உரையாசிரியர் பொருள் கூறியுள்ளார். இந்தப் பெயரும் சங்க நூல்களில் வரவில்லை. நிகண்டாசிரியர்கள் ஒன்றுக்கு மேற்பட்ட பொருளைத் தருகின்றனர். சங்க நூல்களில் பெரியாறு 'சுள்ளியம் பேரியாறு' (அகம் 149) என்று கூறப்பட்டுள்ளது. சுள்ளி என்பதைக் கேரளத்தில் வடமொழியில் குர்ணு என்று தவறுதலாக மொழிபெயர்த்து ஆற்றிற்குப் பெயராக வழங்கினர். சுள்ளி என்ற செடியானது பெரியாற்றின் ஓரம் மிகுதியாகக் காணப்பட்டதால் சுள்ளியம் பேரியாறு என்று கூறியிருக்கலாம். மலையாளம், கன்னடம், தமிழ்மொழிகளில் இப்பொழுதுள்ள வழக்குப்படி சுள்ளி, நீர்ச் சதுப்புப் பகுதிகளில் வளரும் ஒரு செடியாகும். இதைச் செம்முள்ளி என்று தமிழில்

அழைப்பர். இதை அறிவியலில் Barleria prionitis என்றழைப்பர். நற்றிணையில் (215) புலவர் ஒருவர் சுள்ளம்போதனர் என்றழைக்கப் பட்டுள்ளார். இவர் சுள்ளிப் பூவைப்பற்றிப் பாடியிருக்கலாம்.

கூவிரம் என்ற மரம் கூறப்பட்டுள்ளது. கூவிளமும் கூவிரமும் வெவ்வேறான மரங்களாகும். கூவிளத்தின் இலையும் கூவிரத்தின் இலையும் தோற்றத்தில் ஒன்றுபோலக் காணப்படுவதால் குழப்பம் ஏற்படும். கூவிரம் அறிவியலில் Crateava religiosa என்றழைக்கப் படும்.

வடவனம் என்றொரு செடி குறிஞ்சிப்பாட்டில் மட்டும் குறிப் பிடப்பட்டுள்ளது. துளசிச் செடியை வனம் என்று நிகண்டுகள் அழைக்கின்றன. வடமொழியில் வனத்துளசி உள்ளது. ஆதலின் 'வடவனம்' இதுவாகவே இருக்கலாம். இதை அறிவியலில் Ocimum grattissimus என்றழைப்பர். வீட்டுத் துளசி துழாய் என்று குறிஞ்சிப்பாட்டிலும் பதிற்றுப்பத்திலும் (வரி 31) பரிபாடலி லும் (வரி 56) வருகின்றது.

வாகை மரம் தெரிந்ததொன்றாகும். இதை அறிவியலில் Albizzia lebbek என்றழைப்பர்.

குடசம் வெட்பாலை என்றும் குடசப்பாலை என்றும் அழைக்கப் படும். குடஜா என்ற வடசொல் குடசம் என்று மாறியது. குடசம் சங்க நூல்களில் கூறப்படவில்லை. சிலப்பதிகாரத்திலதான் (14 : 87) கூறப்பட்டுள்ளது. இதன் பட்டை Tellicherry bark என்று மருந்துக்காக வெளிநாட்டுக்குக் கேரளத்திலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்டது. இதை அறிவியலில் Hollarhena antidysentrica என்றழைப்பர்.

எருவை என்ற பெயர்க்கு ஒருவகைக் கோரையென்றும் நாணல் போன்ற செடியென்றும் உரையாசிரியர்கள் கூறியுள்ளனர். பைஞ்சாய்க் கோரை என்றும் பொருள் கூறப்பட்டுள்ளது. கொறுக் கச்சி என்றும் (குறுந்தொகை உரை) கூறப்பட்டுள்ளது. ஆனல் இது ஜம்பை (சண்பை) என்ற செடியாகும். இதன் பூ இளஞ் சிவப்பாக இருக்கும். இதை அறிவியலில் Typha angustata என்றழைப்பர்

செருவிளை என்பது காக்கணம் பூவின் வெள்ளை நிறப் பூ வகைச் செடியாகும். இதை Clitoria ternata என்று அழைப்பர். தோட் டங்களில் வளர்க்கப்படும் இதில் மற்றொரு வகை ஊதா நிற முடையதாகும். இதைக் கருவிளை என்று சங்க நூல்களில் அழைப்பர். இதுவும் Clitoria ternata என்பதாகும். இரண்டிற்கும் நிறத்தில் தான் வேற்றுமையுண்டு.

பயினி என்ற மரம் ஒருவகைப் பிசினைத் தரும். இதை வார்னிஸ் செய்வதற்குப் பயன்படுத்துவர். இந்த மரம் குறிஞ்சிப்பாட்டில் மட்டும் கூறப்பட்டுள்ளது. வணிக மொழியில் White Dammar என்றழைப்பர். இது குன்றுகளிலும், மலைகளிலும் காணும் மர மாகும். அறிவியலில் Vateria Indica என்றழைப்பர்.

வாணி என்ற மரப்பெயர் குறிஞ்சிப்பாட்டில் மட்டும் கூறப் பட்டுள்ளது. மற்ற எந்தப் பாடல்களிலும் வழங்கவில்லை. ஆனால் T. E. Boudillon என்ற அறிஞர் திருவாங்கூர்க் காடுகளில் தமிழில் வாணி என்றதொரு மரப்பெயர் வழங்குவதைக் குறிப்பிட்டுள்ளார். இதனுடைய அறிவியற் பெயர் Enonynus dichotomous என்ப தாகும். இது தமிழ்நாட்டில் ஆனைமலைக் காடுகளிலும் காணப்படு கின்றது.

குரவம் என்றொரு செடி கூறப்பட்டுள்ளது. இது கொத்தாகப் பூப்பதைக் குறித்துக் குறிஞ்சிப்பாட்டு கூறியுள்ளது. இது பெரிய புதர் போன்று வளரும். பளபளப்பான இலைகளையுடையது. பூக் களில் சூலகம் நீட்டிக்கொண்டிருக்கும். அதனால் இதன் பூவை நல்ல பாம்பின் பல்லிற்கு (அகம் 237) ஒப்பிட்டிருக்கிறார்கள். இதை அறிவியலில் Webera Corymbosa என்றழைப்பர்.

பசும்பிடி என்றொரு செடி கூறப்பட்டுள்ளது. உரையாசிரியர் நச்சினார்க்கினியர் இதைப் பச்சிலையின் பூக்கள் என்று கூறியுள்ளார். பரிபாடலின் (19 ; 75) உரையாசிரியர் பரிமேலழகர் பச்சிலை என்பது கொழுந்து இலைகளைத்தான் குறிப்பிட்டுள்ளது என்று எழுதி யுள்ளார். அதுதான் நறுமணம் மிக்கதாகும். இதன் இலை நறு மணமுடையதாகையால் இஃது அறிவியலில் Garcinia Zantho-chymus என்பதாகும். இப்பொழுதும் இதைப் பச்சிலை என்று அழைக்கின்றனர்.

வகுளம் என்ற மரம் கூறப்பட்டுள்ளது. இது மகிழ மரம் என்று இப்பொழுது அழைக்கப்படுகின்றது. சிலப்பதிகாரத்தில் இலஞ்சி என்று அழைக்கப்பட்டுள்ளது. இதே இறைஞ்ஞி என்று மலையாளத்தில் இன்று பேச்சு வழக்கில் வழங்குகின்றது. அறிவிய லில் Mimmosops elengi என்று அழைக்கப்படும்.

காயாவை இப்பொழுதும் காசா என்று அழைக்கின்றார்கள். இதற்கு அழகிய நீலநிறப் பூக்கள் உண்டு. காயா கொத்தாகப் பூப்பதைக் குறிஞ்சிப்பாட்டு குறிப்பிட்டு உள்ளது காயாவை Memeclon edule என்றழைப்பர்.

(தொடரும்)

———

## பழந்தமிழ் நூல்கள் அழிந்த வகை

கீழ்க்காணும் செய்தியொன்று, பழந்தமிழ் நூல்கள் சிலவும் இதுபோல் புறச்சமயத்தவரால் அழிந்திருக்கக்கூடும் என்ற கருத்துக்குத் துணைபுரியக் கூடும் என்று கருதுகிறேன்.

"In the interests of "civilization", "progress", "Education" and "religion" the culture—and thus the literature—of Native Americans has been mocked, suppressed and destroyed. Spanish conquistadores spent weeks throwing volumes of Mayan literature into massive pyres until the great libraries stood empty. So effective was their work that only a few specialized scholars today even know the libraries existed. Grandfathers found that the children who used to sit about their lodges to hear the accumulated wisdom of the ages were away in boarding schools operated by the government or the churches—and when they did return to their home, the children could no longer understand the only language Grandfather spoke."

Thomas E. Sanders & Walter W. Peeks' Literature of the American Indian, Glencoe Press, London-1973-பக்கம் xv.

ந. சஞ்சீவி

பேராசிரியர், தமிழ்த்துறை,
சென்னைப் பல்கலைக்கழகம்.

———

## இராமசாமி தமிழ்க் கல்லூரி ஆண்டு விழா

காரைக்குடி, இராமசாமி தமிழ்க் கல்லூரியின் 18 ஆவது ஆண்டு விழாவும், கல்லூரி நிறுவனர் பிறந்தநாள் விழாவும் 22—2—85 இல் பொற்கிழிக் கவிஞர் அரு. சோமசுந்தரம் அவர்கள் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது. அப்போது 'மாதவமேகலை' என்னும் புதிய தொடர்காப்பியம் எழுதிப் பரிசு பெற்ற கவிஞர் நா மீனவருக்குப் பாராட்டு நடந்தது. கல்லூரிச் செயலர் திருமதி பெரி மெய்யம்மை ஆச்சி அவர்கள் ரூ. 1001/- பணமுடிப்பு தந்தார்கள். இணைச் செயலர் திரு. பெரி. இராமசாமி பொன்னுடை போர்த்திச் சிறப்பித்தார். கல்லூரி முதல்வர் திரு. தெ. முருகசாமி வரவேற்க, பேராசிரியர் க. தியாகராசனார் நன்றி கூற நிகழ்ச்சிகள் இனிது நிறைவேறின.

# வாழ்வு தமிழர்க் கீந்திடுவோம்!

[பேராசிரியர் சிவ. சிவராமலிங்கம், எம். ஏ.
சென்னை.]

ஈழத் தமிழர் படுங்கொடுமை
இமயச் சிகரம் போலுயர்ந்தும்
வாழக் கருதும் அவர்தம்மை
வாட்டி வதக்கும் வெறிச்செயலை
ஆழப் புதைக்கும் உணர்வின்றி
அந்தோ நாமும் இருக்கின்றோம்!
சோழன் சேரன் பாண்டியனுய்ச்
சொல்லும் வீரம் போனதுவோ! 1

தமிழன் என்ற இனவுணர்வும்
தமிழ்த்தாய் என்னும் மொழிப்பற்றும்
இமியும் இன்றி நாடோறும்
இலங்கை மண்ணில் நம்மவரை
அமிழ்த்தும் கொடுமைக் கெதிராக
அணுவும் செய்யா திருக்கின்றோம்!
உமியாப் போச்சோ நம்மானம்?
உயிர்தான் உண்டோ நம்முடலில்! 2

கலைகள் வளர்த்த யாழ்ப்பாணம்
காட்டு மிராண்டி ராணுவத்தின்
கொலைசேர் வெறியின் கோரத்தால்
குரங்கின் கைப்பூ மாலையென
இலையாய்ப் போக விடுவோமோ?
இன்னும் தூங்கிக் கிடப்போமோ?
நிலையாய்த் தீர்வு காண்பதற்கு
நெஞ்சில் உறுதி கொள்ளோமோ? 3

ஆட்சி செய்யும் அரசினரும்
அனைத்துக் கட்சி வீரர்களும்
மீட்சி காணும் வகைவிடுத்து
மீன மேஷம் பார்ப்பதனை
மாட்சிச் செயலாய் ஒருபோதும்
மக்கள் நினைக்க மாட்டார்கள்
காட்சிப் பொருளோ நம்வீரம்?
கடிதில் எழுவோம் பகை வெல்வோம்! 4

நிகழும் கொடுமை நிதங்கண்டும்
நீளப் பேசிக் கொண்டிருத்தல்
புகழுக் குரிய ஒன்றன்று
புறப்படு தமிழா புறப்படுநீ!

சுகமும் சொகுசும் காரணமாய்ச்
சோரம் போகும் துரோகிகளை
இகழும் காலம் வரும்விரைவில்
எழுவாய் துயில்விட் டெழுவாயே! 5

உலகோர் கவனம் உன்பக்கம்
உடன்வாழ் மக்கள் உன்பக்கம்
கலகம் அடக்கக் கருதாமல்
காலந் தாழ்த்தல் எதுகுறித்தோ!
விலகி யோட விரட்டிவிடும்
வீணர் சதியை முறியடித்து
இலகும் உரிமை அமைதியெலாம்
ஈழத் தமிழர் பெறச்செய்வோம்! 6

காடாய்க் கிடந்த நிலந்திருத்திக்
கழனி யாக்கிப் பயிர்விளைத்து
மாடாய் உழைத்த மக்களெலாம்
மடிய விரட்டும் பாதகத்தைக்
கூடாதென்று கூறுதற்கும்
கொள்கை ஆய்ந்து கொண்டுள்ளோம்!
ஓடாய்த் தேய்ந்து வருகின்றார்
உயிரைக் காக்க மாட்டோமோ! 7

இலங்கை அரசின் இறுமாப்பை
இனியும் வளர விடுவதனால்
கலங்கித் தவிக்கும் நம்மவரைக்
காத்தல் அரிதாய் முடிந்துவிடும்
இலங்கும் மைய அரசினரும்
இங்கே நாட்டை ஆள்வோரும்
மலங்க விழித்து நிற்காமல்
மாட்டிப் பகையை முடிக்கட்டும் 8

மைய அரசும் மாநிலத்தின்
மாண்ட அரசும் இனிமேலும்
கையைக் கட்டிக் கொண்டிருந்தால்
காரியம் மிஞ்சிப் போயொழியும்
நைய விரட்டும் ராணுவத்தால்
நாச ஆட்சி செய்வோரை
வையம் காண அடக்கிடுவோம்
வாழ்வு தமிழர்க் கீந்திடுவோம்! 9

---

அரசு விருதுபெற்ற

## அ. கி. மூர்த்தியின் அரிய நூல்கள்

| | ரூ. | கா. |
|---|---|---|
| ஏவுகணை நூல்கள் | 4 | 00 |
| கடல் நூல் வரிசை (5) | 15 | 00 |
| அண்ணாவின் பட்டமளிப்பு விழா உரைகள் | 3 | 50 |
| Radio Talks of Anna | 3 | 50 |
| Convocation Addresses of Anna | 3 | 50 |
| All About LASERS | 7 | 00 |
| வான்வெளி வீரர்கள் | 3 | 00 |
| அட்டாண்டிக் பெருங்கடல் | 2 | 00 |
| அண்டார்க்டிக் ,, | 2 | 00 |
| ஆர்க்டிக் ,, | 2 | 00 |
| இந்தியப் ,, | 2 | 00 |
| பசிபிக் ,, | 2 | 00 |

குறிப்பு: கடல்நூல் வரிசை ஐந்து நூல்களும் தொகுதியாகவே வாங்கவேண்டும்.

வெளியீடு :

அல்லி பதிப்பகம்

194, கோத்தவால் சாவடிச் சந்து,
வடக்கு வீதி : : தஞ்சாவூர்.

கிடைக்குமிடம் :

திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிட்
சென்னை-108.

திருநெல்வேலி 6 மதுரை-1 கோயமுத்தூர்-1
கும்பகோணம்-1 திருச்சிராப்பள்ளி-2

அப்பர் அச்சகம், சென்னை - 600 108.